உ

ஓம் தத் ஸத்.

ஸ்ரீ சத்குருப்யோ நம:

# ஸ்ரீ சங்கரப் பிரபாவம்

என்னும்

## ஸ்ரீ சங்கர பகவத் பாதாசாரியர் சரித்திரம்.

நிர்வாண தசகம், மனீஷா பஞ்சகம், விவேக ஷட்கம்,
ஸ்ரீ சங்கரர் அஷ்டகம், ஸ்ரீ சங்கரர் அஷ்டோத்தர
ஸதநாமாவளி முதலியவைகளுடன் கூடியது.

---

இஃது
சென்னை, வியாசர்பாடி, ஆனந்தாஸ்ரமம்,
ஸ்ரீ கரபாத்திர சிவப்பிரகாச ஞானதேசிகேந்திர
சுவாமிகள் அவர்கள் பாதசேகரர்,

ஸ்ரீ சிவராஜானந்த ஞானதேசிகர்

அவர்களால்
இயற்றப்பட்டுப் பதிப்பிக்கப்பெற்றது.

---

ஸ்ரீ சிவப்பிரகாச ஸத்ஜன சங்கம்,
ஸ்ரீ ராமாஸ்ரமம், கார்கூர், மேல்பட்டி போஸ்டு.
(நார்த்தார்க்காடு ஜில்லா.)

---



விலை அணா 5.

1936

## எம்மால் வெளியிடப்பட்ட நூல்கள்

| | |
|---|---|
| ஸ்ரீ சங்கரப் பிரபாவம் | ரூ. 0 5 0 |
| ஸ்ரீ பஜகோவிந்தம் என்னும் த்வாதச மஞ்ஜரிகா ஸ்தோத்திரம் தமிழி லும் தெலுங்கிலும் ஸ்லோகங் களை யமையப்பெற்றுத் தமிழ்ப் பொழிப்புரையுடன் கூடியது | ரூ. 0 1 0 |
| ஸ்ரீ தத்துவ போத விசாரம் (தெலுங்கில்) | ரூ. 0 2 0 |

தபால் சார்ஜ் வேறு.

விலாசம் :—

ஸ்ரீ சிவப்பிரகாச ஸத்ஜன சங்கம்,

ஸ்ரீ ராமாச்ரமம்,

கார்க்கூர், மேல்பட்டி போஸ்டு.

(நார்த்தார்காடு ஜில்லா)

---

☞ இந்நூல், தாது௵ சித்திரை௴ 13௳ (25-4-36) வைசாக சுத்த பஞ்சமி திதி, சனிவாரம் ஸ்ரீ சங்கர ஜயந்தி மஹோற்சவ தினத்தன்று, சென்னை, வேப்பேரி, ஸ்ரீ ஆனந் தாச்ரம சாது மஹா சங்கத்தில், ஸ்ரீ ஜகத்குருபீடம், நியாய சந்திர வேதாந்தபாஸ்கர ஸ்ரீமத் மகாமண்டலேசுவர வீர. சுப்பய்ய ஞானதேசிகேந்திர சுவாமிகள் பாதசேகரரும், சங்க மூர்த்தியுமாகிய ஸ்ரீலஸ்ரீ வீர. சு. அனந்தானந்த சுவாமிகள் அவர்கள் முன்னிலையில் வெளியிடப்பட்டது.

---

PRINTED AT THE EVEREADY PRESS,

34, HUNTERS ROAD, CHOOLAI, MADRAS.



ஸ்ரீ சத்குரவே நம:

# முகவுரை.

வேதாகமங்களிலும், சமயநூல்களிலும், மற்றெல்லா நூல்களிலும் இலைமறை காயென மறைந்து கிடந்த அத்துவித நெறியை, உலகெல்லாவற்றிற்கும் வெளிப்படையாய் எடுத்து உபதேசஞ் செய்தருளுவதற்காக ஸ்ரீ சிவபெருமானே சங்கர பகவத்பாதாசாரியராய்த் திருவவதாரஞ் செய்தருளிய சரித்திரம் யாவரும் அறிதல் வேண்டுமென்பது அவசியமேயாம்.

அத்தகைய திவ்ய சரித்திரம், ஸ்ரீ ஸ்காந்தபுராணம் சிவரகசிய கண்டம் ஒன்பதாவது அம்சம் பதினாறாவது அத்தியாயத்திலும், கூர்மபுராணம் முதற்கண்டம் மூன்றாவது அத்தியாயத்திலும், சிவபுராணம் ஏழாங்கண்டம் முதலாவது அத்தியாயத்திலும், பௌஷிய புராண முதலியவைகளிலுஞ் சொல்லப்பட்ட அந்தச் சிவபெருமானின் அவதாரமாகிய ஸ்ரீ சங்கர பகவத்பாதாசாரியரின் எதிர்காலச் சரித்திரம், ஸ்ரீ வியாசாசாரியர் முதலிய முனிவர்களாற் கூறப்பட்டிருக்கின்றது. அவ்விதமாகவே நடந்த அந்தச் சிவபெருமானின் அவதார சரித்திரத்தை நேரிற் கண்டுங் கேட்டும் உணர்ந்த பெரியோர்களாகிய ஆசிரியர்கள், ஆனந்தகிரீய சங்கர திக்குவிஜயம், சங்கர விஜய விலாசம், வியாசவீயம், கேரளீயம், பத்மபாதரியற்றிய சரித்திரம், மாதவீயம் என்னுஞ் சங்கர திக்குவிஜய காவியம் முதலிய பல நூல்களாக வடமொழியிற் கூறியருளினார்கள். இதுவுமன்றி, மேற்கண்ட சங்கர திக்குவிஜய காவியத்தை, வேத மொழிபெயர்ப்பாசிரியர் காசிவாசி ஸ்ரீ சிவானந்த யதீந்திர சுவாமிகள் அவர்கள் தமிழில் மொழிபெயர்த்துள்ளார்கள். இன்னுஞ் சிலர் இச்சரித்திரத்தைத் தமிழி

வியற்றியு மிருக்கின்றார்கள். ஸ்ரீ சங்கரபகவத் பாதாசாரியர் சரித்திரத்தைக் கூறும் அந்நகைய நூல்கள் விரிவாகவும், படிப்பவர் யாவருக்கும் எளிதில் விளங்காமலும் இருப்ப தால் அவைகளைச் சுருக்கியும், விளக்கியும் ஸ்ரீ வித்யாரண்ய சுவாமிகள் இயற்றியருளிய மேற்கண்ட சங்கர திக்விஜய காவியத்தை ஆதாரமாகக் கொண்டும் இந்த ஸ்ரீ சங்கரப் பிர பாவம் என்னும் ஸ்ரீ சங்கர பகவத் பாதாசாரியர் சரித்திரம் தமிழில் வசனமாகப் பாலர், ஸ்திரீகள், அறிவுடையோர் முத லிய யாவரும் எளிதில் உணர்ந்துய்யச் சுலபமான வசன நடை யில் எழுதப்பட்டிருக்கின்றது.

இன்னும், இந்தச் சாஸ்திரத்தில் ஸ்ரீ சங்கர பகவத் பாதா சாரிய சுவாமிகள் இயற்றிய சாஸ்திரங்களில், அத்வைதார்த் தத்தை விளக்குவதில் பிரதானமான நிர்வாண தசகம், மனீ ஷா பஞ்சகம், விவேக ஷட்கம் முதலிய அரிய சாஸ்திரங்க ளும், ஸ்ரீ சங்கரபகவத் பாதாசாரிய சுவாமிகளைப் பூசிப்பதற்கு அனுகூலமாகிய ஸ்ரீ சங்கரர் அஷ்டகமும், ஸ்ரீ சங்கரர் அஷ்டோத்தர ஶத நாமாவளியுஞ் சேர்த்திருக்கின்றன. இதுவுமன்றி, இதில் ஸ்ரீ சங்கரர் அஷ்டகம், ஸ்ரீ சங்கரர் அஷ் டோத்தர ஶத நாமாவளி ஆகிய இவைகளைத் தெலுங்கிலும் சேர்த்திருக்கின்றது.

இதிலுள்ள பிழைகளைப் பெரியோர் மன்னிப்பார்களாக.

சிவராஜானந்தம்,
ஸ்ரீ சிவப்பிரகாச ஸத்ஜன சங்கம்,
ஸ்ரீராமாஶ்ரமம், கார்க்கூர், மேல்பட்டி போஸ்ட்,
(நார்த்தாற்காடு ஜில்லா)

ஓம் தத் ஸத்

# இந்நூலின் விஷய அட்டவணை.

| தொ. | விஷயம். | பக் |
|---|---|---|
| 25 | வேதத்தின் கர்மகாண்ட ஞானகாண்டக்கருத்துகள் | 32 |
| 26 | சங்கரர் உபயபாரதி தேவியாரோடு வாதிடல் | 34 |
| 27 | சங்கரர் பரகாயப் பிரவேசம் | 35 |
| 28 | சங்கரர் தென்திசையை நோக்கிச் சென்று ஸ்ரீசைல மடைதல் | 38 |
| 29 | காபாலிகனைத் தண்டித்தது | 38 |
| 30 | சங்கரர் இறந்த வேதியச் சிறுவனை யெழுப்பியது | 39 |
| 31 | சங்கரர் அஸ்தாமலகரைச் சந்தித்தல் | 40 |
| 32 | சங்கரர் சிருங்ககிரியை யடைதல் | 41 |
| 33 | சங்கரர் ஆனந்தகிரி என்னும் மாணாக்கருக்கு அருள் புரிதல் | 42 |
| 34 | ஸ்ரீ சங்கர பகவத் பாதாசாரிய ஸ்வாமிகள் அஷ்டக மென்னுந் தோடக சந்தத்தோத்திரம் | 43 |
| 35 | சங்கரரின் மாணவர்கள் சாஸ்திர மியற்றல் | 46 |
| 36 | சங்கரர் தமது அன்னையாரிடஞ் செல்லல் | 48 |
| 37 | சங்கரர் திக்கு விஜயத்தின் பொருட்டுச் செல்லல் | 49 |
| 38 | சங்கரர் காஞ்சீபுரத்திற் காமகோடி பீடத்தை ஸ்தாபித்தல் | 51 |
| 39 | கிருகசன் என்னும் காபாலிகனைத் தண்டித்தது | 51 |
| 40 | சங்கரர் அபிநவ குப்தரை வெல்லல் | 53 |
| 41 | சங்கரர் பஞ்சலிங்கங்களை ஸ்தாபித்தல் | 54 |
| 42 | சங்கரர் கௌடபாதாசாரியரைத் தரிசித்தல் | 55 |
| 43 | சங்கரர் ஸர்வஜ்ஞ பீடமேறுதல் | 55 |
| 44 | சங்கரர் இமயமலையிலுள்ள கேதாரத்தையடைதல் | 56 |
| 45 | சங்கரர் கைலைக்கு எழுந்தருளல் | 57 |
| 46 | ஸ்ரீ சங்கர பகவத்பாதாசாரியர் இயற்றிய விவேக ஷட்கம் | 59 |
| 47 | ஸ்ரீ விநாயகர் ஷோடச நாமங்கள் | 61 |
| 48 | ஸ்ரீ சங்கர பகவத்பாதாசாரிய ஸ்வாமிகள் அஷ்டோத்தரம் | 61 |

உ

ஓம் தத் ஸத்.

ஸ்ரீ மஹாகணபதயே நம:.

ஸ்ரீ சிவாய பரமகுரவே நம:.

# ஸ்ரீ சங்கரப் பிரபாவம்.

என்னும்

# ஸ்ரீ சங்கர பகவத்பாதாசாரியர் சரித்திரம்.

---

## மங்கலம்.

### கடவுள் வணக்கம்.

*சங்கரனாய் மாலாய்ச் சதுர்முகனாய்ச் சத்திகளாய்*
*ஐங்கரனாய்ச் செவ்வேளாய் சூரியனாய்—மங்கலஞ்செய்*
*தெல்லா உயிர்களையும் ஈடேற்றி யின்பருள*
*வல்லான் எவனவனை வாழ்த்து.*

*இரவியு மதியும் வானும் வாயுவு மனலு மப்பு*
*முரவிய மண்ணு மற்றை யுணர்பவன் றானு மாகிப்*
*பரவிடுங் கரணம் பன்னான் காயுமன் றாயு நின்றே*
*யுரைமன மிறந்து ளோங்கு மொளியினை வணங்கல் செய்வாம்.*

### ஸ்ரீ சங்கர பகவத்பாதாசாரியர் வணக்கம்

*பெண்மைபாதிய னென்பெயர் பெயர்க்கவோ விடத்தை*
*யுண்மையார்கள னென்பதை யொழிக்கவோ வுலகில்*
*வெண்மைமாமலை விட்டொரு விரக்தனாய்ப் போந்தே*
*தண்மையே தரு சங்கர முனிவனைப் பணிவாம்.*

## ஸ்ரீ சற்குரு வணக்கம்.

ஈடகன்ற யின்புறவீ டென்பதொன்றிங் கெங்குளதோ வெனமயங்கி யிருந்தவெற்கு, வீடென்ப தங்குமிங்கு மில்லை மைந்தா விரிந்தமன மிறப்பதுதான் வீடதாகும், அடுகின்ற வாசையெலா மிறந்தகாலை யகன்றமன மிறக்குமங்கே யது நீயானால், கூடியவா சைகளெலாங் கொல்வாயென்று கூறிய பிரகாசக் குருவேபோற்றி.

வையமீ தொருவனல் வழிகாட்டி யின்றியே
யுய்யுமா றரிதெனு வுருகுவோ ருளத்தினில்
ஐயமோ ரணுவிலா தகற்றிடும் வீரசுப்
பையதே சிகனடி பரவிவாழ்த் திடுவமால்.

## நூல்.

### ஸ்ரீ சிவபெருமான் சங்கரராக அவதரித்ததின் காரணம்

ஒவ்வொரு சதுர்யுகத்திலும் துஷ்டர்களைக் கண்டித்துச் சிஷ்டர்களை இரட்சித்துத் தருமத்தை நிலை நிறுத்தும் பொருட்டு ஸ்ரீ மஹாவிஷ்ணுவானவர் பத்து அவதாரங்களை எடுத்தருளுவார்; அந்த விவரம் தசாவதார சரித்திரத்திற் காணப்படும். தசாவதாரங்களின் கருத்து அங்ஙனமிருக்க, சதுர் யுகங்கள்தோறும் வேதங்களை வெளியிடவும், வேதார்த்தங்களை விளக்கவும் ஸ்ரீபகவான் நான்கு யுகங்களுக்கு நான்கு அவதாரம் எடுத்தருளுவாரென்று பிரம்மாவானவர் சனத்குமாரருக்குக் கீழ்வருமாறு அருளியுள்ளார். "கிருத யுகத்தில் மஹாவிஷ்ணு கபிலாசாரியராகவும், திரேதா யுகத்தில் சிவபெருமான் தத்தாத்திரேயாசாரியராகவும், துவாபர யுகத்தில் மஹாவிஷ்ணு வியாஸாசாரியராகவும், கலி யுகத்தில் சிவபெருமான் சங்கர பகவத்பாதாசாரியராகவும் அவதரித்து வேதார்த்தங்களை விளக்கி யருளுவார்கள்" என்று பிரம்மா கூறியபடி, இப்பொழுது நடைபெறும் கலியுக ஆரம்பத்தில் ஜைனம், சாக்தம், காணபதம், பைரவம், மல்லாரி, சாரவ்வதம், பௌத்தம், காபாலிகம், நாஸ்திக முதலிய சுமார் எழுபத்திரண்டு மதங்கள் உண்டாகி, அந்தந்த மதங்களின்

உண்மைகளை ஜனங்கள் அறியாமல் கொடியபாபங்களைச் செய்து கொண்டு உலகமெங்கும் மிகவும் சீர்கெட்டு அதருமம் எங்கும் பரவியிருந்த சமயத்தில, அஃதாவது, கலியுகம் பிறந்து இரண்டாயிர வருஷங்களுக்குப் பின்னர், ஸாதுக்களை இரட்சித்துப் பாபிகளைச் சீர்திருத்தஞ்செய்து தர்மத்தை நன்கு ஸ்தாபிப்பதற்காக சிவபெருமானே சங்கர பகவத்பாதாசாரியராக இப்பூவுலகில் அவதரித்தருள நேர்ந்தது.

## தேவர்கள் முறையிடல்

இப்பூவுலகத்தின்கண் இக்கலியுக ஆரம்பத்தில் வைதிகமாகிய சன்மார்க்க ஒழுக்கங் குறைந்து அவைதிகமாகிய துன்மார்க்க வழக்கம் அதிகரித்து, அதனால் ஜீவர்கள் துன்புறுவதைக்கண்ட பிரம்மா முதலிய தேவர்கள் கவலையடைந்து, ஸ்ரீகைலாசத்தைச் சேர்ந்து சிவபெருமானைத் தரிசித்துக் கீழ் வருமாறு முறையிட்டனர். “ஸ்ரீ பகவானே! உலகத்தில் நாஸ்திகர் அதிகரித்து, யாவருக்கும் வேதத்தில் நம்பிக்கையும் பக்தியுமில்லாமல் அவர்கள் அறிவைக்கெடுத்து சற்கருமம், பக்தி, மெய்ஞ்ஞான முதலியவைகள் தலையெடுக்க வொட்டாமல் விலக்கி, நல்லோர் யாவரையும் கெடுத்து வருகின்றனர். மந்திரம், ஜெபம், ஹோமம் முதலிய சற்கருமமும், பாவத்திற்குப்பயந்து நடக்கும் நடையும், வேதம் ஓதலும், தேவபூஜையும், யாக முதலியனவும், சந்நியாசமுடையவர்கள் இப்போது கிடைப்பது மிக அருமையாக விருக்கின்றது. யாகமென்று காதில் கேட்கினும் சகியாமல் காதுகளை மூடிக்கொள்பவராகவே யிருந்தால் எமக்கு யாக அக்கினியிலிடும் ஆகுதி எங்கே கிடைப்பது? அந்தணர்களின் சிரங்களை வெட்டி பைரவருக்குப் பூஜை செய்யும் காபாலிகர்களான பாவிகள் நிறைந்துள்ளார்கள். இவைகளைப் போன்ற இன்னும் அநேக பாவத்தொழில்களைச் செய்பவர்கள் அதிகமாக இருக்கின்றார்கள்; ஆதலின், தேவரீர் உலகைப் பாதுகாத்தற் பொருட்டு, தோஷமுள்ளவர்களைத் திருத்தவும், உலகம் இன்புறுதற்குரிய வேதத்தை நிலைநிறுத்தவும், வைதிக மார்க்கங்கள் தழைத்தோங்கவும், அஞ்ஞானத்தினால் ஜனன மரண துக்கத்தில் வருந்தப்படுகின்ற உயிர்களுக்குப் பிறவித்துன்பத்தை நீக்கி யரு

ளவுமுள்ள கருணை, தேவரீருக்கல்லாமல் வேறு யாரிடத்தில் உள்ளது?" என்று விண்ணப்பித்து வணங்கி ஸ்துதித்து நின்றார்கள்.

அப்போது சிவபெருமான் அவர்கள் வேண்டுகோளுக் கிணங்கி ஓ தேவர்களே! நம்முடைய ஒருகலை பூலோகத்தில் அந்தணர் குலத்தில் மானிட தேகமெடுத்துச் சங்கரனெனப் பெயர் வகித்து, வேதமுடிவாகிய பிரஹ்மசூத்திர முதலியவை களுக்குப் பாஷ்ய முதலியவைகள் அருளிச்செய்து, உங்கள் இச்சைகளை யெல்லாம் பூர்த்தி செய்யும்; நீங்கள் அஞ்சவேண் டாமென்று அருள் புரிந்தனர். அதன்பின், ஸ்ரீ குமாரக்கட வுளை யழைத்து, இத்தேவர்கள் விண்ணப்பிப்பதற்கு முன்ன தாகவே எமது உட்கருத்தை உணர்ந்த திருமாலும் ஆதிசேஷ னும், சங்கர்ஷணர், பதஞ்சலி என்னும் முனிவர்களாய்ப் பூவுல கில் அவதரித்து நமது ஆணையாகிய வேதத்திற் சொல்லப் பட்ட கருமம் உபாசனை ஞானம் என்னும் மூன்றனுள் உபாசனா காண்டத்தினை விளக்கி பக்தி யோகங்களை உலகம் பரவச்செய்து கொண்டிருக்கின்றார்கள். இப்போது நீயும் பூவுலகத்தில் அவதரித்து, ஜைமினி முனிவரால் கூறப்பட்ட பூர்வமீமாம்ஸா சாஸ்திரத்தை ஆதாரமாகக் கொண்டு அவ்வேதத்தில் கூறி யுள்ள கருமகாண்டத்தைத் நிலை நிறுத்தி, நாஸ்திகர் முதலிய வர்களனைவரையும் வென்று வைதிக மார்க்கத்தைச் சீர்திருத் தஞ் செய்து வைப்பாயாக; பின்னர், ஞானகாண்டத்தை நிலை பெறுத்துவதற்கு நமது கலையே அவதரிக்கும். பிரம்மாவான வர் நினது அனுகூலத்தின் பொருட்டு ஓர் அந்தணர்குலத்தில் அவதரித்து, மண்டனமிசிரர் எனத் திருநாமங்கொண்டு உனது முக்கிய சீடராவர். இந்திரனும் சுதன்வன் எனத் திருநாமம் பூண்ட ஒரு அரசனாக அவதரிப்பன். முக்கிய தேவர்களும் வைதிக வேதியர்களாய் அவதரிப்பர் என்று சிவபெருமான் கட்டளையிட்டருளினார். முருகப் பெருமானும் அவ்வாறே யாகுக என அன்புடன் ஏற்றுக்கொண்டு சென்றனர்.

## தேவர்கள் பூவுலகத்தில் அவதரித்தல்

அதன்பின்னர், இந்திரன் சுதன்வன் என்னும் அரசனா கப் பூவுலகில் அவதரித்து, நீதி தவறாமல் பிரஜைகளைப் பரி

பாலித்துக்கொண்டு நாஸ்திகர் நூல்களில் அன்புடையவனுக நடித்துக்காட்டி நாஸ்திகர், புத்தர், சார்வாகர் முதலிய அவைதிக மதத்தினர்களை ஆதரித்து அவர்களிற் சிறந்தவ ரனைவரையும் தன்னிடத்தில் சேர்த்து வைத்திருந்தனன். குமாரக்கடவுள் பிரயாகை என்னும் க்ஷேத்திரத்தில் பட்டபாதாசாரியராகவும், தேவர்கள் வைதிக அந்தணர்களாகவும் அவதரித்தனர். பிரம் மாவானவர் மாகிஷ்மதி நகரத்தில் மண்டனமிசிரர் என்னும் அந்தணராய் அவதரித்து பட்டபாதாசாரியருக்கு முக்கிய மாணுக்கராயினர். பின்னர், பட்டபாதாசாரியரானவர் ஜைமினி முனிவரியற்றிய பூர்வமீமாம்சை என்னும் கருமகாண்ட சாஸ்திரத்திற்குப் பாட்டப்பிரதீபம் என்னும் வார்த்திக நூலைச் செய்து பல மாணுக்கர்களுக்கும் ஓதுவித்துத் தாம் புத்தர் முன்னிலையாகவே அவர்கள் நூலை யெல்லாமுணர்ந்து, அவற் றிற்கெல்லாம் மறுதலை எழுதி வெளிப்படுத்தித் திக்குவிஜயஞ் செய்ய வெளிப்பட்டு, அங்கங்கு பிரசங்கஞ் செய்து வாதித்து நாஸ்திகர் முதலியவர்களை வென்று, சுதன்வ அரசனது பட்ட ணத்திற்கு வந்தருளினுர்.

## பட்டபாதாசாரியர் புத்தரோடு வாதித்தல்

அவர் வரவையறிந்த சுதன்வராஜன் விதிப்படி எழுந்து எதிர்சென்று உபசாரத்தோடு அழைத்துவந்து பூசித்தனன். பட்டபாதரும் மங்கல மொழிகளால் ஆசீர்வதித்து, நாஸ்திகர், புத்தர் முதலிய மதத்தினர்கள் சூழ்ந்திருக்கும் அவ்வரச சபையில் பொற்பீடத்தில் அமர்ந்து அவ்வரச சபையை அழகு பெறுமாறு செய்தனர். பின்னர், அச்சபையினருகி லிருந்த ஓர் மரத்தின்மீதிருக்கும் குயிலின் இனிய குரலைக் கேட்டு, அதனை முன்னிலையாகக் கொண்டு அரசனைக்குறித்து, "ஓ குயிலே! சுருதிக்கு இதமில்லாமலே கடினமாகக் கத்து கின்ற தோஷமுள்ளவைகளான நீசத்தன்மையுடைய காக் கைக்கூட்டங்களின் சம்பந்த மில்லாவிட்டால் நீ சிறப்பை யடை வாயன்றோ" என்று கூறினுர். இத்தகைய கருத்தை யுட் கொண்ட மொழியைக்கேட்ட புத்தர்கள், கோபித்தெழுந்து மதவாதஞ் செய்யத் தொடங்கினுர்கள். பட்டபாதாசாரியர்,

 யுக்திகளினுல் புத்தர் மதத்தைக் கண்டித்து

மார்க்கத்தை நன்கு கூறி ஸ்தாபித்தார். அப்போது புத்தர்கள் வாய் திறக்கவும் ஆற்றலற்றவர்களாய்ச் சித்திரித்த பாவைபோலும் நாவடங்கி நின்றார்கள். அதன்பின், அரசன் உண்மை யுணர்ந்தவனாயிருந்தும், அரசநீதியைப்பற்றி, அந்த இரு திறத்தினர்களையும் நோக்கி, உம்மிருவகையாருள்ளும் கல்விப் பயிற்சிக்கும், அறிவின் நுட்பத்திற்கும் தக்கவாறு யுக்திகள் தோற்றுகின்றன; அதனால், மதங்களை யுயர்வு தாழ்வு என்று மதிக்கலாகாது; ஆதலின், எவர் மலையின் உச்சியிலேறித் தமது மத சித்தாந்தத்தைக் கூறிக் கீழே குதித்து ஓர் அபாயமும் இன்றி வருகின்றார்களோ அவர்கள் மதமே சிறப்புடையதென்று கொள்வேன் என்றான்.

## பட்டபாதாசாரியர் புத்தர்களைத் தெய்வீகத்தினால் வெல்லுதல்

அவ்வரசன் கூறியதைக்கேட்ட புத்தர்கள், ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டு அச்சத்தோடிருந்தனர். அப்போது பட்டபாதாசாரியர் வேதத்தை நினைவிற்கொண்டு மலையுச்சியின்மீது யேறி, "வேதமே பிரமாணமானதால் எனக்கு அணுத்துணையும் துக்கமின்றி சுகம் உண்டாகுக" என்று யாவருங் கேட்கும்படி மிக உரக்கக் கூறிக்கொண்டே கீழே குதித்தனர். உலக ஆசிரியரானதால் பஞ்சுச் சென்று விழுந்ததைப்போல் யாதொரு துன்பமுமின்றிச் சுகமாகவே யிருந்தனர். வேதம், தன்னை நம்பினவர்களின் துன்பத்தை யொழிக்காமல் விடுமோ? காத்தருளியது. அப்போது அரசன், அதுவரையில் தனக்குண்டாயிருந்த தீயோர்கள் கூட்டுறவால் பழித்தற்கிடமாகிய தன்னைத்தானே பலவகையாய் நிந்தித்துக்கொண்டனன். உடனே புத்தர்கள் அரசன் கருத்தைக் குறிப்பிலறிந்து, மணிமந்திர ஔஷத வல்லமையினாலும் இவ்வாறு தேகத்தைப் பாதுகாத்துக்கொள்வாருமுண்டு; ஆதலின், இதுவே மதநிச்சயப் பிரமாணமாகாது என்றார்கள். இங்ஙனம் புத்தர்கள் நேரிற் காணப்பட்ட மஹாத்மியத்தையும் மாறுபடுத்திக் கூறியதால் அரசன் கோபித்துக் கீழ்வருமாறு கொடிய உறுதிமொழி கூறினான். அஃதென்னவெனில் "உங்கள் இருவகையாரையும் ஒரு இரகசிய விஷயத்தைப்பற்றிக் கேட்கின்

றேன், யார் அதனைச் சொல்ல முடியாதவர்களாகின்றார்களோ அவர்களைக் கற்காணத்திலிட்டு ஆட்டிவிடுவேன்” என்று சொல்லிப் பிறரொருவரும் அறியாதபடி கொடுவிஷமுடைய கரும்பாம்பை ஒரு குடத்தி லடைத்துக் கொண்டு வந்து, “இதற்குள்ளிருப்பது யாது” என்று இருவகையாரையும் வினவினன். அப்போது புத்தர்கள் நாளைக் காலையிற் கூறுவோம் என்றனர். அதற்கரசன் இருவகையாருக்கும் அதுவே காலவெல்லையாக நியமித்தனன்.

பின்னர், அந்தணர்கள் சூரியனைக் குறித்துத் தவமியற்ற அத்தவத்திற் கிரங்கி சூரிய பகவான் தோன்றி, குடத்தினுள் அநந்தசயனராகிய விஷ்ணு இருக்கின்றார் என்றருளி மறைந்தனர். புத்தர்களும் மந்திர வித்தைகளுக்குள் அடங்கிய தாரகை என்னும் தேவதையி னருளால் குடத்தில் ஓர் கரும்பாம்பு இருக்கின்றது என்று தீர்மானித்துக்கொண்டார்கள். மறுநாள் அவ்விரு திறத்தாரும் அரச சபைக்கு வந்து, புத்தர்கள், “அக் குடத்தில் கரும்பாம்புள்ளது” என்று முன்னர்க் கூறிவிட்டனர். பட்டபாதாசாரியர், அநந்தசயனராகிய விஷ்ணு இருக்கின்றார் என்று கூறினார். அது கேட்ட புத்தர்கள் முகமலர்ந்தனர். அரசன், முகம் வாட்டமடைந்து சிறுபொழுது சிந்தித்திருந்தனன். அச்சமயம் தெய்வத்தன்மையுள்ள அசரீரி வாக்கு கீழ்வருமாறு வெளிப்பட்டது. “ஓ அரசனே! அந்தணர்கள் கூறியது யாதோ அதுவே உண்மையாம்; அதிலுள்ள சந்தேகத்தை யகற்றி நீ கூறிய உறுதிமொழியைப்போல் நடப்பாயாக” என்று கூறிய அசரீரி வாக்கைக் கேட்டுச் சந்தேக மொழிந்து குடத்தினுள் ஆதிசேஷன்மீது பள்ளிகொண்ட ஸ்ரீ மஹாவிஷ்ணுவைத் தரிசித்தனன். உடனே பட்டபாதாசாரியரானவர் அந்த விக்கிரஹத்தை எடுத்து யாவருக்குங் காட்டி “இக்கடவுளையே உலகத்தைக் காக்குங் கடவுள் என்று வேதங் கூறுகின்றது” என்றார். அப்போது அரசன், வேதமே உண்மையென்பதனை யிப்போது நன்றாக உணர்ந்தேன் என்று கூறிவிட்டு, வேதத்திற்கு விரோதிகளான புத்தர் முதலிய நாஸ்திகரனைவர்களையும் கற்காணத்திலிட்டுக் கொல்லும்படி

வேலையாளர்களுக்குக் கட்டளையிட்டனன். உடனே விரைவில் புத்தர், நாஸ்திகர் முதலியவர்கள் நாசமானார்கள்.

அந்தத் தீயவர்கள் அழிந்த பின்னர், பட்டபாதாசாரிய ரானவர், வேதத்தின் கருமகாண்டமாகிய வேதம் ஓதல், யாகஞ் செய்தல் முதலிய வைதிக கருமங்களை எங்கும் பரவச் செய்த னர். அதுமுதல் நித்திய, நைமித்திய முதலிய கருமங்கள், வேதம் ஓதல், யாக முதலிய வைதிக கருமங்கள், தானதரும உபகாரங்கள் முதலிய நல்லறங்கள் விருத்தியாகத் தொடங் கின. ஆகவே, கருமமே தலைமையாய், கருமமே புருஷார்த் தமுமாகிய வுறுதிப்பொருளா யிருந்தது. தேவர்கள் திருப்தி யடைந்ததால், கிரமமான மழைபொழிந்து யாவரும் சுகமாக விருந்தார்கள். அப்போது உலகத்திலுள்ள உயிர்களெல்லாம் பிரஹ்மஞான மில்லாமலே அநாதியாகவந்த அஞ்ஞானதி துன் பங்களை யனுபவித்து, ஜனன மரண சமுசார சாகரத்தில் மூழ்கிக் கிடந்தார்கள். அதனால் கருணைக் கடலாகிய சிவபெரு மான் தாமே அவதாரஞ் செய்து ஞானகாண்டத்தை நிலை நிறுத்தி, யாவருக்கும் அருள்புரியத் திருவுளத்தில் நினைந்தரு ளினார்.

## ஸ்ரீ சங்கரர் அவதாரம்

அதன் பின்னர், கேரள நாட்டில் இடபாசல பூரண வாஹினி நதி சமீபத்தில், சுயம்புலிங்கேசுவரர் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் * காலடி என்னும் அக்கிரஹா ரத்தில் நம்பூதிரி பிராஹ்மண வம்சத்தில் அத்திரி மஹரிஷி கோத்திரத்தில் வித்தியாதிராஜர் என்பவருக்குப் புத்திரராய் உதித்தவரும், வேத சாஸ்திரங்கள் நன்குணர்ந்தவரும், சகல ஒழுக்கங்கள் நிறைந்தவருமான சிவகுரு என்பவர்; அகஸ்திய மஹரிஷி சிஷிய பரம்பரையில் உதித்த மகிபண்டிதன் என்

* காலடி :—இது கொச்சின் ஷோரனூர் இருப்புப்பாதையில் ஓர் தங்கு மிடமாகிய ஆள்வாய் என்னும் ஊருக்கு ஆறுமைல் கிழக்கே யுள் ளது. இந்தக் காலடி க்ஷேத்திரம் சசலக்கிராமமென்றும் முன் வழங்கப் பட்டிப்போது முள்ளது. சிவபெருமான் காலடியில் அந்த அக்கிரஹார மிருப்பதால் காலடி என வழங்கப்பட்டது.

னும் பிராஹ்மணரின் புத்திரியாகிய சகல நற்குணங்கள்மைந்த ஆரியாம்பாள் என்னும் கன்னிகையை விவாகஞ் செய்து கொண்டு, இல்லறவொழுக்கத்தை நடத்திப் புகழுற்றிருந்தனர். இவர்களுக்கு விவாகம் நடந்து இருபத்தேழு வருஷங்களாகியும் புத்திரப்பேறு இல்லாததால், தம்பதிகள் இருவரும் புத்திர னில்லையே என வருந்திச் சுயம்பு லிங்கேசுவரரை நோக்கிப் பன்னிரண்டு வருஷங்கள் தவஞ்செய்த பின்னர், ஓரிரவில் தம்பதிகளிருவரும் நித்திரை செய்துகொண்டிருக்கும்போது அவர்கள் கனவில் பரமேசுவரர் அந்தணர் கோலமாகத் தரி சனங் கொடுத்து, தீர்க்க ஆயுளுள்ள அறிவில்லாத பேதையர்க ளாகிய பல மக்கள் வேண்டுமா? அல்லது அற்ப ஆயு ளுள்ள பூரண ஞானம் நிறைந்த ஒரே புத்திரன் வேண் டுமா? என்று வினவ, ஞான பூரணனாகிய மகனொருவனே போதுமென்று இருவரும் கூறி, அவருடைய அருள்பெற்று, புத்திரகாமேஷ்டி யாகம் முடித்து, யாகசேஷமாகிய பாயசத் தைப் பகிர்ந்துண்டு, அவ்விருவரும் சிவத்தியானத்தோடு இருந்தனர். அதுமுதல் பரமேசுவரர் ஆரியாம்பாள் கர்ப்பத் தில் முறையே பிரவேசித்து தனது சக்தியால் கர்ப்பச் சின் னங்களையும், இவ்வம்மையார் நித்திரையி லிருக்கும்போது தேவர்கள் பாரிஜாத முதலிய புஷ்பங்களால் பூசித்தல் முதலிய அநேக அற்புதங்களையுங் காட்டி யருளினார். அதுமுதல் இப் பூவுலகத்தில் கால மழையும், பெரு விளைவும், நோயின்மையும், தரும புத்தியுமுண்டாகி மக்களனைவரும் சந்தோஷமாக இருந் தனர்.

இவ்விதமாகப் பத்து மாதங்கள் நிறைந்தவுடன், இக் கலியுகத்தில் மூவாயிரத்து ஐம்பத்தெட்டாவது ஆண்டுக்குச் சரியான விக்கிரம சகம் பதினொன்றாவதாகிய ஈசுவர வருஷம், வைசாக மாதம், சுக்ல பக்ஷம், பஞ்சமி திதியில், திருவாதிரை நக்ஷத்திரமும் ஆதிவாரமும் கூடிய சுபதினத்தில், சுபலக்னத் தில் சுபக்கிரகங்கள் கூடி நிற்கவும், சுபக்கிரகங்கள் தங்கள் உச்சஸ்தானத்தி லிருக்கவுமுள்ளதோர் நல்ல முகூர்த்தத்தில் சிவகுருவின் மனைவியாராகிய ஆரியாம்பாள், பார்வதி தேவி யார் முருகக்கடவுளைப் பெற்றதுபோன்று, சுகமாக ஓர் ஆண் குழந்தையைப் பிரசவித்தனர். அப்போது தேவதுந்துபிகள்

முழங்கப் புஷ்பமாரி பொழிய, வைதிகர் மனங் களிக்க யாவ ருங் கண்டு வியப்படைந்து மகிழ்ந்தனர்.

அப்போது சிவகுருவானவர் புத்திர உற்பத்தியைக் கேட்டு மிகுந்த நீரில் ஸ்நானம் பண்ணி விதிப்படி ஜாத கரும முதலியவைகளை முடித்து, சோதிடரை யழைத்து ஜாதகப் பயனைக் கேட்க, இது மஹாபுருஷ ஜாதகமென்றும், இக் குழந்தை பரிபூரண பரமான்மாவேயாம் என்றும் அவர்கள் கூற நன்கு உணர்ந்தனர். இரவில் அக்குழந்தையி னொளியினு லேயே அக்குழந்தையுள்ள வீடு விளங்குதலால், விளக்கில்லா மலே இருள் நீங்கியதாயிற்று. அங்கொருநாள் ஒரு வெண் ணிற நாகசர்ப்பம் அக்குழந்தையைச் சுற்றிக்கொண்டு படம் அசைத்து ஆடியிருக்கக்கண்ட வீட்டிலுள்ளா ரனைவரும் பயந்து அயலார்களுடன் திரண்டுவந்து பார்க்கையில் அது வில் வழும் உருத்திராக்ஷ மணிகளும் திருநீறுமாகத் தோற்றியது. யாவருங் கண்டு தெய்வச்செயலென்று கூறி ஆச்சரியமடைந் தனர்.

மற்றொருநாள் அந்தக் குழந்தையைத் தாயாரிடம் இருக் கக் காணாமல் அச்சத்தோடுந் தேடுகையில், பிரஹ்ம தேஜ ஸோடு கூடிய விருத்த வேதியர் ஒருவர் வீணையுடன் சாம வேதம் பாடிக்கொண்டு பிச்சைக்கு வந்து அவ்வீட்டின்கண் இருந்த ஒரு பூச்சுணைக்காயைத் தரும்படி கேட்டார். அதனை அவ்வாறே கொடுக்கையில், அதை அவ்வேதியர் கைதவறிவிடக் கீழே விழுந்து உடைந்தது. அதனுள் அந்தக் குழந்தை யிருக் கக் கண்டார்கள். அப்போது யாவரும் அதிசயித்துத் தாயா ரிடம் கொண்டுபோய்ச் சேர்த்தனர். இந்த ஆரவாரத்துள் வந்த வேதியர் கண்ணுக்குப் புலப்படாமல் மறைந்தனர்.

அக்குழந்தைக்கு, நெற்றியில் ஓர் நேத்திரத்தின் குறிப் பும், தலையில் ஓர் இளம்பிறையைப்போன்ற சந்திரன் குறிப் பும், உச்சியில் எவ்வளவு துடைக்கினும் உலராத ஈரமும், கழுத்தின் மீது நீலக்குறிப்பும், தோள்களில் சூலம் போன்ற குறிகளும், ஸ்படிக நிறம்போலும் தேககாந்தியும், மார்பில் நாகம் போன்ற குறிப்பும், பாதங்களில் சாமரம் போன்ற

குறிகளும், இரண்டு திருக்கரங்களிலும் சக்கரம், கதை, வில், டமருகம் இவைகளைப் போன்ற குறிகளும், நீண்ட தோள்களும், பரந்த மார்புமாகிய சிறந்த புருஷ இலக்ஷணமும், அகன்ற கண்களும், அழகிய மேனியும், காண்பவருக்குச் சுகத்தை விளைவித்துச் சங்கரரின் அடையாளங்களைக் குறிக்கின்றபடியால், குழந்தை அவதரித்த பதினோருவது தினத்தில் அக்குழந்தைக்குச் சங்கரர் என்னும் நாமகரணஞ் சாற்றினர். அக்குழந்தை வளர்பிறைபோலும் நாளுக்கு நாள் வளர்ந்து வந்தது.

## சங்கரர் அற்புத பால லீலைகள்

அதன் பின்னர், அந்தக் காலடி க்ஷேத்திரத்திலுள்ள சுயம்புலிங்கேசுவரருக்குச் சாற்றியிருந்த வில்வ ருத்திராக்ஷ மாலைகளை இப் பாலசங்கரர் தம்மீது இருக்கக் காட்டினர். ஒரு நாள் சுழல் காற்றில் ஆகாயத்தில் மறைந்தனர்; யாவருந் தேடி எட்டுத்திக்குகளிலிருந்து எட்டுப் பாலசங்கரக் குழந்தைகளைக் கொண்டு வர, பின்னர் ஒரே பால சங்கரக் குழந்தையாக விளங்கினர். மற்றொரு நாள் அங்குள்ள சுயம்புலிங்கேசுவரருக்கு இரத உற்சவம் நடக்கும்போது அந்தத் தேரின் மீதிருந்த விக்கிரகம் மறைந்து போயிற்று. அதன் ஸ்தானத்தில் இந்தப் பாலசங்கரர் தாமே குழந்தையாகத் தேரின்மீது இருந்தனர். இவர் இன்னும் பல அற்புதங்களைக் குழந்தைப் பருவத்தில் புரிந்து வந்தனர். அதன் பின்னர் மூன்றாவது வயதில், கேள்வியின்றித் தானாகவே காவியங்களையும், புராண முதலியவைகளையுங் கற்றனர். இவரது மூன்றாவது வயதின் முடிவில், தந்தையாகிய சிவகுருவானவர், அந்தப் பாலசங்கரருக்கு முடி வைத்தல் என்னும் சௌள கருமம் முடித்துக்கொண்டாடினர். பாலசங்கரரின் மூன்றாவது வயதின் முடிவில் அந்தச் சிவகுருவிற்கு விருத்தப்பருவ மிகுந்து, கருமவசத்தாற் சிவகதியடைந்தனர். அவரது உடம்பை அடுக்கிய விறகுகளின்மீது வைத்து இந்தப் பாலசங்கரர் ஒரு தருப்பைப் புல்லைக் கிள்ளி அதன்மீது இட்டனர்; அது தீப்பற்றி நறுமணம் வீச, தந்தையின் கருமத்தை முடித்தனர்.

## சங்கரர் பிரம்மசரியம்

அதன் பின்னர், ஐந்தாவது வயதில் சங்கரருக்கு உபநயன ஸமஸ்காரம் நடந்தேறியது. அது முதல் இவர் குரு சேவை செய்து கொண்டு வேத வேதாங்காதி சாஸ்திரங்களைப் பயின்று வந்தனர். ஒருநாள் தம்முடன் படிக்கும் பிள்ளைகள் சிலருடனே பிக்ஷான்னங்கேட்கப் புறப்பட்டு, வறுமையினால் மிகவருந்தும் அயாசித தீக்ஷிதர் என்னும் அந்தணருடைய வீட்டுக்குச் சென்று "பவதி பிக்ஷாந்தேஹி" என வேண்டினர். அந்த மனைமாது சங்கரரைப் பார்த்து, "பிரம்மசாரியே! கஞ்சிக்குங் கதியில்லாத பரம தரித்திரர்களாயிருக்கும் எங்கள் வீட்டிற்கு வந்தீரே; பிக்ஷான்னம் இடுமவ்வளவு புண்ணியம் எனக்கு இல்லையே!" என்று சொல்லிக்கொண்டே ஒரு நெல்லிக்கனியைச் சங்கருடைய கையிற்கொடுத்து, வருந்தி நின்றனள். அப்போது, இவர் கருணை மிகுந்து அந்க்ஷணமே ஸ்ரீ இலக்ஷ்மிதேவியை பக்திபரவசராக, "கனகதாரா ஸ்தவம்" என்னும் ஸ்தோத்திரத்தால் துதித்தனர். ஸ்ரீ இலக்ஷ்மி தேவி பிரசன்னமாகி, "என்னால் ஆகத்தக்கது என்ன" என்று கேட்கச் சங்கரர் "இந்த வீட்டாருக்கு வறுமைநீங்குமாறு அநுக்கிரகம் புரிதல் வேண்டும்" எனப் பிரார்த்தித்தனர். அதற்கு, ஸ்ரீ இலக்ஷ்மிதேவியார், "முற்பிறப்பில் இவர்கள் புண்ணியம் செய்யாதவர்களாகையால் எவ்வாறு அதை அடைவார்கள்" என்று கூறக் கேட்டுச் சங்கரர், "அம்மையே! எனக்கு இப்போது பிக்ஷையாக இவர்கள் அளித்த நெல்லிக்கனிக்காகவாவது இவர்களுக்கு அருள் புரிதல் வேண்டும்" எனப் பிரார்த்தித்தனர். இவருடைய பரோபகார புத்திக்கு வியந்து இலக்ஷ்மிதேவி "அங்ஙனமே ஆகுக" என்று அருளி மறைந்தனள்.

உடனே அந்த மனை நிறையுமாறு பொன் நெல்லிக்கனிகள் தோன்றின. இவ் வற்புதத்தைக் கண்டவர்களனைவரும் மிக ஆச்சரிய மடைந்து புகழ்ந்தார்கள். இவ்விஷயம் எங்கும் பரவி அநேகர் வந்து சங்கரரைத் தரிசித்துச் சென்றார்கள். இவ்வண்ணம் பாலசங்கரர், ஏழாவது வயதிற்குள் வேத வேதாங்க முதலிய சர்வ சாஸ்திரங்களையும் உணர்ந்தவராய், அன்னை

யாருக்குத் தொண்டுபுரிந்தும், வேத சாஸ்திரங்களை ஓதுவித்தும், சகல நற்குணங்களுடன் வளர்ந்து வந்தனர்.

## சங்கரர் நதியை வரவழைத்தல்

*மற்றொருநாள் சங்கரர், தாயாரை யழைத்துச் சென்று நதியில் நீராடிவிட்டு வரும்பொழுது, விருத்த பருவத்தாலும், வெய்யிலாலும் தாயார் நடக்க முடியாமல், களைத்து வழியிலொருமரத்தினடியில் இளைப்பாறலுற்றாள். அருகிலிருந்து சங்கரர் தன்தாயாரின் களையைத் தீர்த்து, தம்முடைய இல்லத்திற்கு மெல்லென அழைத்து வந்து சேர்த்தனர். தாயின் குறிப்பையறிந்த சங்கரர், அந்தப் பூரணவாகினி நதியைத் தமது வீட்டிற்கருகில் வரும்படி துதித்தவளவில், அந்நதி தெய்வம் பிரசன்னமாகி “நாளையுதயத்தில் நின் எண்ணம் போல் முடியும்” என்று வரங்கொடுத்துச் செல்ல, மறுநாள் காலையில், தூரத்திலிருந்த அந்த ஆறு அங்குள்ள ஸ்ரீ கிருஷ்ண ஆலயத்தைப் பெயர்த்துக்கொண்டு தமது வீட்டிற்கருகில் பெருகிச் சென்றது, சமீபத்தில் ஆற்றைக் கண்டு தாயார் மகிழ்ந்து, தன் புத்திரனை வாழ்த்தி நீராடி இன்புற்றாள். இந்தச் சங்கரரின் அருட்செயலைக் கண்டு அங்குள்ள யாவரும் துதித்துக் களிப்புற்றிருந்தனர். இவருடைய அருமை பெருமைகளைக் கேட்டு, அந் நாட்டு அரசனாகிய சத்தியவன்மன் வந்து இவரைத் தரிசித்துப் புத்திரப்பேறு தனக்கு உண்டாக அருள்புரிய வேண்டுமென்று பிரார்த்தித்தனன். அவனுடைய வேண்டுகோளுக் கிணங்கிச் சங்கரர், அவனுக்குப் புத்திரப்பேறு உண்டாகுக என்று ஆசீர்வதித்தருளினர். இவ்வற்புதங்களை யெல்லாம் அகஸ்தியர், தூர்வாசர், உபமன்னியர், ததீசி, கௌதமர், திரிகலர், நாரதர், தத்தாத்திரேயர் முதலிய முனிவர்கள் அறிந்து சங்கரர் வசிக்கும் வீட்டிற்கெழுந்தருளி வந்து வாழ்த்துகள் செய்து விட்டுப் போயினர். அதன் பின்னர், அவரன்னையார் சங்கரருக்குத் திருமணஞ் செய்விக்கக் கருதி, அகஸ்தியரை மீண்டழைத்து நோக்கி, சுவாமி! எனது புத்திரன் திருமணஞ் செய்து கொண்டு நற்புத்திரனைப் பெறுவானோவென்று கேட்க, அவர் “உனது புத்திரன் ஜகதாசாரிய குருவேயன்றி சம்சாரியாகான்” என்று சொன்னது*

மன்றி, எட்டாவது வயது சமீபித்தபடியால் விரைவில் சந்நியாசம் பெற்று பிறப்பினை மாற்றிக்கொள்ளில், ஆயுள் கூடிவரும் என்று சொல்லிவிட்டுச் சென்றனர். அதுகேட்ட ஆரியாம்பாள் மிகவும் துக்கத்தில் ஆழ்ந்தனள். அதன்பின், சங்கரர், தன் தாயாருக்குத் தகுந்த சமாதானங்களைச் சொல்லிவிட்டுத் தான் சந்நியாசம் பெற அன்னையின் உத்தரவு கேட்க, அவ்வன்னை ஒப்புக்கொள்ளாமல் மகனைச் சமாதானப்படுத்தினள். ஆயினும் இவருடைய மனம் சந்நியாசத்தின்மீதே நாட்டங்கொண்டிருந்தது.

## சங்கரர் சந்நியாசம் அடைதல்

இப்படிச் சிலநாட் சென்றபின், சங்கரருக்கு எட்டு வயதாயிற்று. மற்றொருநாள் காலையில் சங்கரர் தமது அன்னையுடன் ஆற்றுக்குப்போய் நீர்த்துறையிலிறங்கி ஸ்நானஞ் செய்யுங்கால் முதலையொன்று அவர் காலைப் பற்றியது. அப்பொழுது சங்கரர் தமது அன்னையை நோக்கி, அம்மா! நான் முதலை வாயில் அகப்பட்டுக்கொண்டேன் இனியாகிலும் சந்நியாசத்திற்கு உத்தரவு கொடுங்களென்று கேட்டனர். அப்பொழுது, அசரீரி வாக்கு, "இப்போதே சந்நியாசம் பெற்றுக்கொண்டால் இன்னும் எட்டு வருஷம் பிழைத்திருக்கலாம்" என்றது. அதைக்கேட்ட அம்மையார் திடுக்கிட்டு ஒன்றுந் தோன்றாமல், அப்பா! நீ சந்நியாசம் பெற்றாயினும் உயிர் வாழ்ந்திருக்கிலே போதுமென்று ஆசீர்வதித்தனள். சங்கரர், அவ்விடத்திலேயே பிரேஷ மந்திரத்தை உச்சரித்து, சந்நியாசத்தைத் தானே பெற்றுக்கொண்டனர். உடனே இவருடைய காலைக் கவ்விக்கொண்டிருந்த முதலை இவரை விட்டு அகன்று, கந்தர்வ உருவங்கொண்டு சங்கரருக்கு வணங்கி "சுவாமி! நாரதர் சாபத்தால் முதலையானேன், இப்போது அந்தச் சாபம் உம்மால் நீங்கிற்றென்று சொல்லிவிட்டுச் சங்கரரிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு கந்தர்வலோகஞ் சென்றது. உடனே அன்னையானவள் சங்கரரை நோக்கி, என் கடைசிக் காலத்தில் உன் கையாலே நற்கதியடைய விரும்புகிறேனென்று சொன்னவுடன், சங்கரர் தாயே உமது கடைசிக் காலத்தில் என்னை நினைத்தால் யான் எங்கிருப்பினும் அக்கணமே உம்மை யடைந்து

செய்யவேண்டிய கடனை முடித்து, நற்கதி பெறுவிப்பேன்; இதிற் சந்தேகம் வேண்டாமென்று வாக்களித்து, அவ்வம்மையாரின் உத்தரவு பெற்றுக்கொண்டு, அந்தக் காலடி க்ஷேத்திரத்தை விட்டுப் புறப்படும்போது, ஸ்ரீ கண்ணபிரான் எதிர் தோன்றி "முன்னர் உன் தாயாருக்காகக் கொண்டுவந்த ஆற்றின் பெருக்கத்தால் என்னுடைய கோவிலும், விக்கிரக வடிவமும் வெள்ளத்தால் மூழ்கிவிட்டது, அதை உன் கையினாலேயே வேறோரிடத்தில் ஸ்தாபித்துச் செல்க" என்று கூறி யருளினார். அது கேட்ட சங்கரர், உடனே அந்தக் கிருஷ்ண மூர்த்தி விக்கிரகத்தை அங்கு தகுந்தவிடத்தில் ஸ்தாபித்து, கிருஷ்ண பரமாத்மாவின் அருளைப்பெற்று, அவ்வூரைவிட்டு நீங்கி, பெரியோர்களின் சிஷ்டாசார விதிப்படி தமக்குக் கிரம சந்நியாசம் அருளத்தக்க சற்குருவைத் தேடிச் சென்றனர்.

## சங்கரர் ஆசிரியரை நாடியடைதல்

அதன் பின்னர், நர்மதை யாற்றங்கரையில் ஒரு ஓட்டைச் சாணளவு துவாரத்தையே வழியாகவுடைய குகையில் ஸ்ரீ கோவிந்த பகவத்பாதாசாரியர் தவஞ் செய்துகொண்டிருப்பதை யறிந்து, இவர் ஆதிசேஷாவதாரமென் றுணர்ந்தவராய் அக்குகையை மூன்றுதரம் பிரதக்ஷிணஞ் செய்து நமஸ்கரித்துப் பின்வருமாறு கோவிந்த பகவத்பாதாசாரியரைத் துதி செய்தனர்.

"மஹாவிஷ்ணுவுக்குப் படுக்கையாகவும், பரமேசுவரருடைய பாதங்களுக்கு ஆபரணமாகவும், இப் பூமண்டலத்தைத் தலையில் தாங்குபவராகவுமுள்ள ஆதிசேஷனுடைய விசேஷ அவதாரமாகிய தங்களை நான் பணிகின்றேன். முன்னொரு காலத்தில், தமது ஆயிர முகங்களை நோக்கி மாணாக்கர்கள் பயந்தார்களென்பதற்காக, அத்தகைய ஆதிசேஷத் திருமேனியை நீக்கிச் சாந்தராய் ஒரு முகத்துடன் அவதரித்து மாணாக்கர்களை அனுக்கிரகித்த பதஞ்சலி பகவானல்லவா தாங்கள்" என்று இவ்விதமாகச் சங்கரர் துதித்ததைக் கேட்டவுடன், கோவிந்த பகவத்பாதர் ஆனந்தமேலீட்டால் நிருவிகற்ப சமாதியிலிருந்து கலைந்து, இவரை "நீ யார்" என்று வினவினர். அதைக்

கேட்ட சங்கரர் கோவிந்த பகவத்பாதாசாரியரை வணக்கத்துடன் நோக்கிக் கூறத் தொடங்கினர் :—

யான் பூமியல்லன், ஜலம் அல்லன், அக்கினி யல்லன், காற்று அல்லன், ஆகாயம் அல்லன், இந்திரியம் அல்லன், அவற்றின் கூட்டம் அல்லன்; அவை பிறழ்ச்சி யுடையனவாயிருத்தலின். ஆதலால், இவை யொழிந்தவிடத்தில் மீதியாயிருப்பவனும், சுழுத்தியில் முக்கியமாகச் சித்தித்திருப்பவனும், கேவலமும் ஏகமுமான சிவம் நான். என்பதே முதலான ஆத்மஞான இரகசிய அனுபவங்களடங்கியுள்ள மிக அற்புதமான "நிர்வாண தசகம்" என்றும் "தச சுலோகி" என்றுஞ் சொல்லப்படும் பத்துச் செய்யுட்களால் கீழ்வருமாறு மறுமொழி கூறினர் :—

## நிர்வாண தசகம் (தச சுலோகி)

ஓதுமண்ணிலை யுதகமிங்கிலை யொளிருந்தேசிலை காலிலை
பூதவிண்ணிலை யிந்தியமிலை புகன்றவைகளின் றிரளிலை
யேதுமேவிய சாரமேவி யிறப்பதாலிச் சுழுத்தியின்
மீதியாயுள பூரணானந்த மேனியான சிவோகமே. 1

சாதியுமிலை யாஸ்ரமமிலை சாதியாஸ்ரம தருமமா
நீதியுமிலை தாரணையிலை நிதித்தியாசன யோகமே
யாதியுமிலை கற்பனையப வாதவாஸ்ரய மாதலாற்
சோதியாய்நிலை நின்றபூரண சுத்தரூப சிவோகமே. 2

தந்தைதாயிலை தேவருமிலை தங்குலோகங் களுமிலை
சந்தவேதங்க ளில்லையாகங்கள் சகலதீர்த்தங் களுமிலை
தொந்தமற்ற சுழுத்தியிற்றொட ராதுநீங்குத லான்மகா
னந்தபூரண சத்யகேவல ஞானநித்த சிவோகமே. 3

பன்னுசாங்கிய சைவமுமிலை பாஞ்சராத்திர முமிலை
யுன்னுசைனமீ மாஞ்சையுமிலை யுலகுண்மற்ற மதமிலை
துன்னுஞானிக ளநுபவப்பிர சித்தமாய சொரூபமாய்ப்
பின்னமேயற நின்றபூரண பிரமமென்ற சிவோகமே. 4

பகருமேலிலை கீழிலைப்பா லுள்ளிலைப்புற முமிலை
யகலமேனடு வில்குறுக்கிலை யாகிழக்கிலை மேற்கிலை
ககனமென்ன நிறைந்தகண்டசிற் ககனகேவல ரூபமாய்ச்
சுககனச்சுக தாதிபேத விகீனசுத்த சிவோகமே. 5

வெள்ளையுமிலைக் கருமையுமிலை வேறுபீத சிவப்பிலை
குள்ளமுமிலை நெடியதுமிலைக் குறைபெருத்தலு மில்லையே
தள்ளியித்தனை ரூபமுந்தவி ராதசோதி சொரூபமா
யுள்ளபூரண ஞானவின்ப வுபாதிகீன சிவோகமே. 6

சாத்திரந்தனைப் போதிப்பானிலைச் சாத்திரம்படிப் பானிலை
சாத்திரமிலைப் பாடமுமிலை சாற்றுபீயிலை நானிலை
சாத்தியாதி சகத்திலைச்சல மற்றுமிஞ்சுத லான்மகா
சாத்திரப்பொரு ளானபூரண சாந்தபோத சிவோகமே. 7

சாக்கிரமிலை சொப்பனமிலைச் சார்சுழுத்தியி லையிதிற்
றுக்குவிசுவனிற் றைசதனிலைத் தங்குபிராஞ்ஞனு மில்லைமூன்
றுக்கையுமிலை யவையவித்தை விகாரமாதலி னவையை
நீக்கிநின்றிடு துரியபூரண நித்தபோத சிவோகமே. 8

அறிவியாபக மாதலாலழி வற்றதத்துவ மென்றதாற், சுதசிதப்பொரு ளானதாற்றனில் வேறொன்றையறக் கொடாத தாற், சுத்தமாயுள சிவமொழிந்திலண் சகமெனும்பொரு ளேயிலை, யதுவிதென்றுரை செய்வதற்கரி தாமகண்ட சிவோகமே. 9

இல்லையேக மெனுஞ்சொலுமிரண் டென்றுசொல்லுவ தெங்ஙனே, யில்லைகேவல மோடகேவல மில்லை சூனியா சூனிய, மெல்லையற்ற வகண்டசிற்சுக கேவலபூரண வத்துவாற், றெல்லைவேத முடிப்பொருடனைக் கூறுவ தெப்படி யோதுவாம். 10

நிர்வாண தசகம் முடிந்தது.

---

இவ்விதமாகச் சங்கரர், சகல வேதங்களினாலும், உபநிஷத்துக்களினாலும், பிரஹ்ம சூத்திரங்களினாலும், பகவத்கீதை முதலிய சாஸ்திரங்களினாலும் மனோவாக்குக் கெட்டாத சாந்த வஸ்

துவின் தத்துவம் சொல்லப்பட்டிருக்கிறதோ அதே தத்து
வ. ாண

இவ்வாறு சங்கரரின் அமிருதமயமான அத்துவித சாக்ஷாத்காரத்தினின்றெழுந்த வாக்கியங்களைக் கோவிந்த பகவத்பாதர் கேட்டு ஆனந்தபரவசராய், "சங்கர! நீ, நேரே சிவ சொரூபத்தின் அவதாரமே என்று நன்குணர்ந்தேன்; சர்வமும் உணர்ந்தவனா யிருந்தும் உலக சிஷ்டாசாரத்தை நிலை நிறுத்த சீடனாக வந்திருக்கின்றாய்" என்று கூறி, சங்கரருக்கு முறைப்படி கிரம சந்நியாசம் கொடுத்தருளி, நான்கு வேதங்களின் முடியில் விளங்கும் மஹாவாக்கியத்தை உபதேசித்தரு [illegible] ிவ்வாறே சங்கரர், ஆசாரியரிடம் வேதாந்த சாஸ்திரங்களனைத்தையும் நன்றாக உணர்ந்து, ஆசிரியருக்கு அற்புதமான பணிவிடைகளைச் செய்துகொண்டிருக்க, ஓர்நாள் தன் ஆசிரியர் குகையில் நிர்விகற்ப சமாதியிலிருக்கும்போது நர்மதை யாற்றில் ஜலம்பெருகி வெள்ளம் அதிகரித்து வருவதைக் கண்டு சங்கரர், தன் கமண்டலத்தில் அப்பெரிய வெள்ளத்தை அடக்கிக்கொண்டு அங்குள்ள எவ்வுயிருக்கும் யாதொரு துன்பமும் வாராவண்ணம் காத்தருளினார்.

மற்றொருநாள், கோவிந்த பகவத்பாதர் நர்மதை யாற்றில் ஸ்நானம் செய்துவிட்டுத் தமது ஆசிரமத்திற்குப் போகும்போது, உச்சி வெய்யிலில் வெப்பத்தினை நோக்கிச் சங்கரர் தமது காவித்துணியை ஆகாயத்தி லெறிந்தனர். அது குடையைப் போல் அந்தக் குருபரனுக்கு நிழல் செய்து வந்தது. சங்கரர் செய்யும் அற்புதப் பணிவிடைகளுக்கு ஆசிரியர் மிகவும் மகிழ்ந்து கீழ்வருமாறு கூறினார் :—

சங்கர! முன்னொரு காலத்தில் நான் இமயகிரிக்குச் சென்றிருந்தபோது நமது பரமாசிரியராகிய வியாச முனிவரைத் தரிசித்தேன். அப்போது அவரை வணங்கித் தாங்களியற்றிய வேதத்தின் ஞானகாண்டமாகிய உத்தர மீமாம்சை என்னும் பிரஹ்ம சூத்திரத்திற்கு, அதன் உண்மைப் பொருளையுணர்த்தும்படியான பாஷியம் செய்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தேன். அவரதற்கு "எங்கப் பால சந்நியாசி உம்

மால் வேதாந்த உபதேசம் பெற்றுப் பெருவெள்ள நீரைத் தன் கமண்டலத்தில் அடக்குவானோ அவனே பிரஹ்ம சூத்திர முதலிய வேத முடிவுக ளனைத்திற்கும் பாஷ்ய முதலிய விளக்க வுரைகள் செய்வோனும், நம்முடைய * பரம்பரைக்குப் புகழ் விளைவிப்பன்" என்று கூறி யருளினார். அவ்வாறே உன்னிடத்திற் கண்டேனாகையால் இங்கிருந்து புறப்பட்டுக் காசி க்ஷேத்திரமடைந்து பிரஹ்ம சூத்திர முதலியவைகளுக் குப் பாஷ்ய மியற்றி, உலகத்திற்குச் செய்யவேண்டிய சீர் திருத்தங்களைச் செய்து வெற்றி யடைவாயாக, என்று கட்டளை யிட்டுப் பெருங் கருணையோடும் வாழ்த்தி யருளினார்.

## சங்கர பகவத்பாதர் காசிவாஸம்

அப்போது, சங்கரர் தமது ஆசிரியரின் திருவடியை நமஸ் கரித்து, ஆசிரியரைப் பிரிய மனமில்லாமலும், அவரது கட்ட ளையை மறுக்க முடியாமலும், அவரைத் தியானித்துக்கொண்டு அங்கிருந்து புறப்பட்டுச் சென்று கங்கை நதிக்கரையிலுள்ள காசி க்ஷேத்திரத்தை யடைந்தனர்.

பின்னர், காசி க்ஷேத்திரத்தில் கங்கையைத் துதித்து ஸ்நானஞ்செய்து, விசுவநாதப் பெருமான் முதலிய மூர்த்தி களைத் தரிசித்துத் துதித்து, அங்குள்ள, வித்தையில் வல்லவர் களாகிய பட்டாசாரியர்களின் சாஸ்திர சந்தேகங்களை நீக்கி, அவ்விடத்தில் யாவருக்கும் சன்மார்க்கங்களைப் போதித்து, சந்நியாச ஆச்ரமத்தை நிலைபெறுவித்து, அத்துவித முடிவை யாவருக்கும் உபதேசித்து ஆயிரக்கணக்கான சீடர்களுடன் சிலநாள் வசித்திருந்தனர். தருக்கர், மீமாம்சகர், சாங்கியர் முதலியோரது கல்விச் செருக்கு ஒழிந்து வந்தது.

## ஸனந்தனர் சங்கர பகவத்பாதரை யடைதல்

இவ்வாறு, சைவம், வைஷ்ணவம், காணுபத்யம், கௌமா ரம், சாக்தேயம், சௌரம் முதலிய ஷண்மதங்களின் உண்மை

---

*பரம்பரையாவது :—நாராயணர், பிரஹ்மா, வசிஷ்டர், சக்திமுனி வர், பராசரர், வியாசர், சுகர், கௌடபாதர், கோவிந்த பகவத்பாதர், சங்கர பகவத்பாதர் என்பது சிஷ்ய பரம்பரை.

களை யாவருக்கும் போதித்திருக்கையில், ஒருநாள், சோழ நாட்டில், காவேரி நதி தீரத்தில், விமலர் என்னும் பிராம்மணருக்குப் புத்திரனாக அவதரித்த ஸனந்தனர் என்னும் சிறிய பிரம்மசாரி ஒருவர், சற்குருவைநாடிக் காசிக்ஷேத்திரமடைந்து, சங்கர பகவத் பாதரைத் தரிசித்து வணங்கித் துதித்து, சற்குருவே! பவக்கடலில் மூழ்கிப் பயமுற்ற அடியேனைக் கருணையோடு பவக்கடலினின்றுங் கரையேற்றி யருள்புரிதல் வேண்டும் என்று பிரார்த்தித்தனர். அதன்பின், சங்கர பகவத்பாதர் வந்தவரிடத்தில் மஹா புருஷ இலக்ஷணமும், கைகளில் சங்குசக்கர முதலிய ரேகைகளு மிருக்கக்கண்டு, இவர் விஷ்ணுவின் அவதாரமென் றுணர்ந்தவராய், கருணையால் நோக்கி விதிப்படி சந்நியாச ஆச்ரமங்கொடுத்து, வேத முடிப் பொருளை உபதேசித்துச் சிஷ்யராக அங்கீகரித்துக்கொண்டனர். இவர் ஸனந்தனாசாரியர் என்னும் பெயருடன் புகழ் பெற்றிருந்து குரு பணிவிடைகளில் மிகுந்த ஆற்றலுடையவராய்ச் சங்கர பகவத் பாதாசாரியருக்கு முக்கிய சிஷ்யரா யிருந்தனர்.

## சங்கர பகவத்பாதர் விசுவநாதரைத் தரிசித்தல்

இவ்வாறிருக்கும்போது, ஒருநாள் சங்கர பகவத் பாதாசாரியர், தமது சிஷ்யர்களுடன் கங்கா நதிக்குச்சென்று ஸ்நானஞ் செய்துவிட்டுத் திரும்பிவரும் வழியில், ஒரு சண்டாளன், தலைமேற் கள்குடந்தாங்கி, நான்கு நாய்களுடன் இவர் முன்பு வந்தனன். அவனை, ஆசாரியர் நோக்கி எட்டிப் போவென்று சொன்னார்: அதைக்கேட்ட அவன் ஒதுங்காமல் உடனே சில கேள்விகளைக் கேட்கத் தொடங்கினான்: ஸ்வாமி, யதீசுவரரே! போ போ வென்று விலகும்படி கூறுகின்றீரே, அது உம்முடைய அன்னமயமாகிய தேகத்தினின்றும், எனது அன்னமயமாகிய தேகத்தினைத் தூரமாகப் போகும்படி கூறுகின்றீரா? அல்லது பஞ்சகோச விலக்ஷணமாகிய ஆத்மாவினின்றும் மற்றோர் ஆத்மாவைப் போகும்படி கூறுகின்றீரா? அன்னமய கோசமாகிய தேகம் சடமாகலின் அது போகாது, பஞ்சகோச விலக்ஷணமான ஆத்மாவோவெனில், அது சித்து, அந்தச் சித்து, பரிபூரணமாய் நிறைந்திருக்கின்றது; அவ்வித

ஆத்மாவிற்குப் போதல் வருதல் முதலிய தொழில்க ளில்லையெனத் தெளிந்த மஹாத்மாவான உமக்கு யாதொரு கற்பனையுமில்லாதிருக்க, சண்டாளனென்றும் பிராஹ்மணனென்றும் பேதபுத்தி என் வந்ததெனக் கேட்க, ஆசாரியர் அதுகேட்டு மிகுந்த ஆனந்தத்துடன், மறுமொழி கூறுகின்றார் :—

தேக முடையவர்களிற் சிறந்தோய்! ஜாக்கிர சொப்பன சுழுத்திகளில் மிக வெளிப்படையாக எந்தச் சாக்ஷி (ஞானம்) விரிகின்றதோ, எது பிரம்மா முதல் எறும்பீறாகவுள்ள சரீரங்களிற் பிரவேசித் திருப்பதான ஜகத் சாக்ஷியோ, அதுவே யான்; திருசிய வஸ்து நானல்லன் என்னுந் திடப்பிரஞ்ஞை யொருவனுக் கிருக்குமாயின், அவன் சண்டாளனாக இருந்த போதிலும், அல்லது பிராம்மணனாக இருந்தபோதிலும், அவன் எனக்குக் குருவாவான் என்பது என் மனோநிச்சயம். என்பன முதலான அரிய கருத்த விடைகளை "மநீஷா பஞ்சகம்" என்று சொல்லப்படும் செய்யுட்களால் கீழ்வருமாறு கூறினார் :—

## * மநீஷா பஞ்சகம்

ஒருதினஞ் சங்கரா சாரியன் காசிபு
ரியுத்தம வீதியிற் சஞ்சரிக் கும்பொழு
தொருவன்சண் டாளனே வந்தெதிர்த் தங்ஙனே
யூனமில் லாவியன் ஞானஞ்சேர் திக்கவே
திரிதரும் போதவன் றன்னையங் கன்னவன்
றிட்டியாற் கண்டுநீ யெட்டிப்போ போவெனப்
பாவிடும் வாக்கியங் கேட்டதற் குத்தரம்
பறையனுந் தேவன்றான் பகர்ந்ததைப் பகருவாம்.(1)

யாதுயாம பஞ்சபூ
தாக்கிய வுன்னுடை யாக்கையைப் பற்றியிவ்
வன்னமே யாதியின் காரிய வாக்கையை
யணுகவொண் ணாதென வெட்டிப்போ வென்பதோ

* மநீஷா — அறிவு.

பின்னமே தும்மிலாப் போதவான் மாவினைப்
பேணியான் மாவினைப் போமெனச் சொன்னதோ
பண்ணிடும் பரமகஞ் சாச்சிரம யதிகளிற்
பரமனே யிவ்வித மென்றுநீ பகருவாய். (2)

அலையிலா வாரிபோற் சச்சிதா நந்தமா
மான்மவா காசமே யெங்கணு மசலமா
யெலையற நிற்கவிங் கந்தணன் புலையனென்
றிம்மகா பேதமெக் கலையினுற் கண்டதோ
விமலமாங் கங்கையி னப்பிலும் புலையர்தம்
வீதியி னப்பிலும் விம்பமாந் தன்மையா
விலகுசொன் னக்குட மட்குடப் புனலினு
மிரவிவா னங்களி னேதுபே தஞ்சொலாய். (3)

சாக்கிரஞ் சொப்பன நித்திரை மூன்றிலுந்
சாட்சியாய்ப் பங்கய முதிதம் பாக்கமா
மாக்கைக டம்மிலுங் கோசையாய்ச் சாட்சியா
யச்சித்தி யாமொன்று காசமே போன்றிருக்
தாக்கறுஞ் சித்தசே தனிங்கத் திரியங்
தானல வென்றுார நிச்சய முள்ளவன்
யோக்கிய வந்தண னீசன்ற ணுகிலும்
முத்தவா சானென வென்மனோ நிச்சயம். (4)

எந்தச்சித் துத்தனைத் தேவர்திரி யக்கொடி
விந்தரி யாவரு மியாமென வறிவரோ
வந்தச்சித் தொளியினுற் சடமன விந்திய
வாக்கையெப் புலனுமே சித்தென வொளிர்வதே
வந்தமே கத்தினுன் மறைவதா மிரவிபோல்
வளர்கா ணங்களான் மறையுமச் சித்தினைச்
சந்ததம் பாவித்துச் சுகமுறு மியோகிதான்
சாதியா லாமெனுங் குருவெனு நிச்சயம். (5)

பிரமநா னென்னுடை மாயைமுக் குணமதாற்
பேதமாஞ் சகபர சிவகற் பிதமதாம்
பரமபூ ரணசிதா காசநா னேயெலாம்
பரமநா னெழியவோ ரறுவும்வே

பரசுக நித்தநின் மலநிரஞ் சனபரப்
　　பிரமநிச் சயவுர முடையனு ரோவவ
னருமையா மந்தண னீசன்று னாகிலும்
　　அகிலவா சானென வென்மனே நிச்சயம். (6)

குரவன்வாக் காற்சுக நசுவரம் பிரமமே
　　குற்றமி னித்திய மென்றுராங் கூர்ந்துபின்
னொருமையாய் நாடொறு மிடையறுப் பிரமமே
　　யுணர்ந்துதா னேதனிற் சாந்தமாஞ் சித்தனாய்ப்
புரிந்தமுன் வினையினைப் பௌஷிய வினையுடன்
　　போதமாம் வன்னியிற் றகனமே செய்துபின்
வருபிரா ரத்தத்துக் காக்கையை யொப்பித்து
　　வானம்போ னிற்பவன் குருவென நிச்சயம். (7)

எந்தவின் பக்கடலேசமேல சந்திர
　　னிந்திர னாதிய ரின்பமுற் றுள்ளவ
னெந்தவின் பத்தினை யோகிகள் சாந்தமா
　　மிதயமீ தெய்தியே யின்பமே லாகிறா
ரந்தவின் பக்கடலுள்ளாடுங் கும்மனத்
　　தன்மையோன் பிரமமே பிரமவித் தல்லமற்
றந்தத்தே தேவரும் வந்திக்கும் பாதனா
　　மன்னவன் குருவென வென்மனே நிச்சயம். (8)

மனீஷா பஞ்சகம் முடிந்தது.

---

இவ்வண்ணம் அச்சண்டாளனுடன் பேசிக்கொண்டிருக்கும்போதே, அச்சண்டாளவுருவத்தைக் காணாதவராய், ரிஷபவாகனத்தின்மீது சந்திரனைத் தரித்த திருமுடி யுடையவராயும், முக்கண்ணராயு மிருக்கின்ற ஸ்ரீ விசுவநாதப் பெருமானையே கண்டனர். அந்தக் கள் குடம் கங்கையாகவும், நான்கு நாய்களும் நான்கு வேத மூர்த்திகளாய்த் துதித்தும் நின்றன. இக்காட்சியைக் கண்டவுடனே சங்கர பகவத்பாதர் ஆனந்தக் கண்ணீருடையவராய்க் கீழ் வருமாறு துதித்தனர்:—

"பரமேசுவரா! யான் தேகத்தை நோக்குங்கால் தங்கள் திருவடிக்கு அடியனாயிருக்கின்றேன்; யான் ஜீவனை நோக்கி

லோ, தங்களது கூறாக யிருக்கின்றேன்; முக்கண்ணா! பரி பூரணா! பரிசுத்த ஆன்மாவாகிய சாக்ஷியை நோக்கிலோ, யான் தங்களது சொரூபமாகவே யிருக்கின்றேன்; என எல்லாச் சாஸ்திரங்களாலும் என் புத்தி, திடத்தன்மையை யடைந் திருக்கின்றது” என்று பலவாறாகத் துதித்தனர்.

அப்போது விசுவநாதர் அதைக் கேட்டு மகா ஆனந்த மடைந்து சங்கரரது சிரசில் கையை வைத்து அநுக்கிரகஞ் செய்து, “நாமே நீயா யிருக்கின்றாய்” என்று கூறி “வேதத் தின் ஞான காண்டமாகிய பிரஹ்ம சூத்திரத்திற்கு, பலரும் பல விதமான அர்த்தம் பண்ணுகின்றன ராதலின், அதனுண்மை யான அர்த்தத்தைப் பாஷிய வாயிலாக நீயே செய்து வெளிப்ப டுத்தி, வாதிப்பவர்களை உடன்படுத்தி, யாவருக்கும் உணர்த்தி, ஞானமார்க்கத்தினை மாணாக்கர் பரம்பரையால் உலகத்தில் விளங்கச் செய்து எம்மை யடைவீராக” என்று திருவாய் மலர்ந்து வாழ்த்தி யருளினார். அக்காலத்தில் தேவ துந்துபி முழங்கிப் புஷ்ப மழை பொழிந்தது. இவ்விதமாக அருள் செய்த பின்னர், விசுவநாதர் மறைந்தருளினார். அதன் பின்பு, சங்கர பகவத் பாதாசாரியரும், சீடர்க ளனைவரும் விசுவநாதர் தேவாலயஞ் சென்று தரிசித்துத் துதித்து நிற்கையில், அந்த விசுவலிங்க மூர்த்தியிலிருந்து “சிவம் சத்தியம், சத்தியம் அத்துவிதம்” என்னும் வாக்கியங்கள் அனைவருங் கேட்க வெளிப்பட்டன.

பின்னர் ஆசாரியர், ஸனந்தனர் முதலிய சீடர்களுடன் அங்கிருந்து புறப்பட்டு இமய பருவதத்திலுள்ள பதரிகாச்ர மஞ் சென்று நர நாராயணரைத் தரிசித்து அருள்பெற்றுத் திரும்பி வரும்பொழுது, அநேக மதவாதிகளை வென்று சிர் திருத்தஞ் செய்து யாவருக்கும் அத்துவித ஞானமார்க்கத் தைப் போதித்து, காசி க்ஷேத்திரத்திற்கு சீடர்களுடன் வந்து சேர்ந்திருந்தனர்.

## சங்கர பகவத்பாதர் இயற்றிய சாஸ்திரங்கள்

பின்னர், சங்கர பகவத் பாதாசாரியார், தமது பன்னிரண் டாவது வயதில் விஷ்ணு ஸஹஸ்ர நாமத்திற்கும், பிரஹ்ம சூத்திரம், பத்து உபநிஷதங்கள், பஞ்ச ருத்திரோபநிஷதங்

கள், நரசிங்கதாபினி, கௌஷீதகி பிராம்மணம், ஸ்ரீ ருத்திராத்தியாயம், பகவத்கீதை, ஸநத் ஸுஜாதீயம், முதலிய இன்னும் மற்றவற்றிற்கும் அத்துவித சித்தாந்தமாகிய பாஷியங்களை (விளக்க உரைகளை) எழுதி, ஆத்மபோதம், தத்துவபோதம், அபரோக்ஷானுபூதி, அத்துவித ஸஹஸ்ரி, உபதேச ஸஹஸ்ரி, சிவானந்தலஹரி, சௌந்தரியலஹரி, தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்திரம், விவேகசூடாமணி, சாதனபஞ்சகம், பஞ்சீகரணமுதலிய சுமார் 124 சாஸ்திரங்களுக்கு அதிகமாக இயற்றி, அந்தச் சாஸ்திரங்களை மாணுக்கர்களுக்கு உபதேசித்துக் கொண்டிருந்தனர்.

## பஜ கோவிந்தம்

மற்றொரு சமயத்தில் மாணுக்கனொருவன் மிக்க ஆர்வத்தோடு வியாகரண சூத்திரங்களை நெட்டுருப் போட்டுக்கொண்டிருக்கக்கண்ட சங்கர பகவத்பாதாசாரியர், ஆத்மா கடைத்தேறுவதற்கு அக்கல்வி சிறிதும் பயன்படாதென்பதை அவனுக்கு எடுத்துரைப்பதற்காகக் கீழ்வருமாறு கூறியருளினர்.

"பஜகோவிந்தம் பஜகோவிந்தம் பஜகோவிந்தம் மூடமதே
ஸம்ப்ராப்தே ஸந்நிஹிதேகாலே நஹிநஹி ரக்ஷதி டுக்ருங்கரணே."

"భజగోవిన్దం భజగోవిన్దం భజగోవిన్దం మూఢమతే
సంప్రాప్తే సన్నిహితే కాలే నహినహి రక్షతి డుకృఞ్కరణే"

இதன் பொருள்:—அறிவீன மூடமதியுடையவனே! மரண சமயத்தில் யமன் வந்து இழுக்கும்போது, டுக்ருங்கரணே என்று சொல்லப்பட்ட வியாகரண சூத்திரம் உன்னைக் காப்பாற்றமாட்டாது; ஆகையால், கோவிந்தனை பஜனைசெய், கோவிந்தனை பஜனைசெய், கோவிந்தனை பஜனைசெய். என்பதே முதலாக பன்னிரண்டு ஸ்லோகங்களால் அவனுக்கு அனுக்கிரகஞ்செய்தனர். இந்த ஸ்லோகங்கள் *ஸ்ரீ கோவிந்தத் துவாதசா

*ஸ்ரீ கோவிந்தத் துவாதசா மஞ்ஜரிகா ஸ்தோத்திரம் என்னும் சாஸ்திரம், தெலுங்கு எழுத்துகளிலும் தமிழ் எழுத்துகளிலும் ஸ்லோகங்களை யமைத்துத் தமிழ்ப் பொழிப்புரையுடன் எம்மால் அச்சிடப்பட்டிருக்கின்றது. விலை அணா ஒன்று. இரண்டணு தபால் ஸ்டாம்பு கீழ்க்கண்ட விலாசத்திற்கு அனுப்பினால் புக்போஸ்டாக அனுப்பப்படும். விலாசம்:—ஸ்ரீராமாச்ரமம், கார்க்கூர், மேல்பட்டி போஸ்ட், (N.A.Dt.)

மஞ்ஜரிகா ஸ்தோத்திரம் என்று சொல்லப்படும். உலகத்துள்ள மோகத்தைக் களையவல்லதானமையின் இச் சிறு சாஸ்திரத்தை "மோகமுத்கரம்" (மோகமென்னுங் காட்டை வெட்டியழிக்குங் கோடாரி) என்றுங் கூறுகின்றார்கள்.

### ஸனந்தனர் கங்கையைக் கடத்தல்

இவ்வாறிருக்க, சங்கர பகவத் பாதாசாரியர், ஸனந்தனராகிய தன் முக்கிய சிஷ்யரிடத்தில் பிரியமாயிருப்பதாக, மற்ற மாணவர்கள் பொறாமை கொண்டிருப்பதை யுணர்ந்தவராய், ஆசாரியர், ஸனந்தனருடைய குருபக்தியின் பிரபாவத்தை விளக்கிக் காட்டும்பொருட்டு, மற்ற மாணவர்களின் முன்னிலையில் ஒருநாள் கங்கைநதியின் அந்தக் கரையிலிருந்த ஸனந்தனரைத் தமது அருகில் வருமாறு அழைத்தனர். ஸனந்தனர், உடனே ஆசாரியருடைய திருவடியைத் தியானித்துக்கொண்டு, கங்கையி லிறங்கி நடக்க ஆரம்பித்தார். அப்போது, கங்காதேவி ஒவ்வோரடியின் கீழும் ஒவ்வொரு தாமரைப் புஷ்பங்களைத் தோற்றும்படிச் செய்து தாங்கினாள்; அப் புஷ்பங்களின்மீது நடந்து வந்து ஆசாரியரை நமஸ்கரித்தனர். மற்ற மாணவர்கள் பொறாமையை விட்டொழித்து யாவரும் அவருடைய குருபக்தி விசேஷத்தை யறிந்து கொண்டாடினார்கள். பத்மங்களால் தாங்கப்பெற்ற பாதத்தை யுடையவராதலின் ஆசாரியர் இவருக்குப் பத்மபாதர் என்று பெயரிட்டு விளங்கச் செய்தனர். குருபக்தியின் மகிமை மிகவும் பெரிதே.

### சங்கரர் வியாச முனிவரைக் காணல்

அதன்பின்னர், சங்கர பகவத்பாதாசாரியர், வியாசபகவானியற்றிய பிரஹ்ம சூத்திரத்திற்கு, தாமியற்றிய பாஷ்யத்தைக் காசி க்ஷேத்திரத்தின் கங்கைக்கரையில் பத்மபாதர் முதலிய ஆயிரக்கணக்கான மாணவர்கட்கு போதித்துக்கொண்டிருக்கும் சமயத்தில், ஒருநாள் பிரஹ்ம சூத்திரத்திற்குக் கர்த்தாவாகிய வியாச பகவான், ஒரு வயோதிகப் பிராம்மணராக ஆசாரியரிடம்வந்து அவ்விடம் பாடம் நடந்துகொண்டிருக்கும் பிரஹ்ம சூத்திரத்தில் சில கடினமான சூத்திரங்

## சங்கரர் பட்டபாதரைச் சந்

பிறகு, சங்கரர், மாணாக்கர்களோடும் திக்விஜயஞ் செய்யப் புறப்பட்டு *பிரயாகை க்ஷேத்திரமடைந்து, அங்கு கங்கை, யமுனை, சரஸ்வதி நதிகள் கூடுமிடமாகிய திரிவேணி ஸங்கமத்தில் மாணாக்கர்களுடன் ஸ்நானஞ் செய்யும்போது, ஆசாரியர், தமது அன்னையை ஸ்மரித்து ஸ்நானஞ் செய்தனர். பின்பு, நதிக்கரையில் சீடர்கள் புடை சூழ மரநிழலில் அமர்ந்திருக்கையில், பூர்வ மீமாம்ஸை யென்னுங் கருமகாண்டத்தை நிலைநாட்டிப் புகழ்பெற்றிருந்த பட்ட பாதாசாரியர் அந்தப் பிரயாகையில் துஷாக்கினி என்னும் உமித்தீயில் இறங்கியிருக்கிடாரென்று கேள்விப்பட்டு, உடனே சீடர்களுடன் அங்குச் சென்று அவரைப்பார்த்து எதற்காக உமித்தீயில் இறங்கினீர் என்று சங்கரர் கேட்டனர். அதைக்கேட்ட பட்ட பாதாசாரியர் "நான் முன்னர் பௌத்த குருவினிடஞ் சென்று, பௌத்தனென்று பொய்சொல்லி அவர்கள் மத விஷயங்களைத் தெரிந்துகொண்டு, வேத விரோதிகளாகிய அந்தப் புத்த மதத்தினர்களை வென்று, அவர்கள் மதத்தை நாசமாக்கினேன். அந்தப் பௌத்த குருவினிடம் வஞ்சகமாகப் பொய் சொன்னபடியால், நான் குருத்துரோஹம் செய்தவனாயினேன். ஓர் எழுத்தை ஒருவரிடந் தெரிந்து கொண்டாலும், அவர் குருவாவார். ஆகையினால், இதற்கு என்ன பிராயச்சித்தம் என்று தர்ம சாஸ்திரங்களைப் பார்த்தேன்; அதில் மிகவுங் கஷ்டமான மரணத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று இருந்தது; அதற்காக இப்படிச் செய்தேன்" என்று கூறினார். அதைக்கேட்டுச் சங்கரர், கர்ம மார்க்கமட்டும் போதாது, அதன்பின், ஞான மார்க்கத்தையே அனுஷ்டிக்க வேண்டும் என்று தகுந்த பிரமாணங்களுடன் கூறினார். அவர் கூறியவை யெல்லாம் அறிந்து "எனக்குத் தங்களுடைய தரிசனமாயிற்று; நான் கிருதார்த்தனானேன்; தாங்கள் சொன்னவைகளை யெல்லாம் நன்கு தெரிந்து கொண்டால், நன்மை உண்டாகும்; நான் உலகத்திற்குச் சொல்ல இப்பொழுது அசக்தனாக இருக்கின்றேன்; என

* பிரயாகை என்பது இப்பொழுது "அலஹாபாத்" என்று பெயர்

பார்க்கும்போது, அவ்வீட்டு வாசற்கதவு மூடப்பட்டிருந்ததால், உடனே சங்கரர், தமது யோக சக்தியால் மேல்வழியாய் ஆகாயமார்க்கமாய் உள்ளே சென்றனர். அப்போது அங்குள்ள மண்டன மிசிரர், வியாசபகவானையும் ஜைமினி முனிவரையும் தமது தவ வலிமையால் வருவித்துக்கொண்டு, அவர்களை முறையே விசுவ தேவஸ்தானத்திலும், பித்ரு ஸ்தானத்திலும் வைத்துப் பூசித்து, தமது பிதிர்களுக்குச் சிரார்த்த கருமம் செய்து கொண்டிருந்தனர். அதைக்கண்டு சங்கரர் அங்குச்சென்று தருப்பைக் கூர்ச்சம் வைத்துப் பூசிக்கும் விஷ்ணு ஸ்தானத்தில் நின்றனர்.

மண்டனமிசிரர், வேதத்திலுள்ள கர்மகாண்டத்தையே முக்கிய மார்க்கமாகக் கொண்டு யாவருக்கும் போதிப்பவராகையால், சகல கர்மமும் நீங்கிய சந்நியாசிகளைக் கண்டால் வெறுப்பது வழக்கம். இவ்வாறிருக்க, அந்தச் சமயத்தில் அங்கு நின்ற சங்கரரைக் கண்டவுடன் மண்டனமிசிருக்கு அதிக கோபம் உண்டாயிற்று. உடனே சங்கரரை நோக்கி, எங்கிருந்து சந்நியாசி வந்தது என்னும் கருத்தாக "எங்கிருந்து மொட்டை?" என்று கேட்டனர். அதைக் கேட்ட சங்கரர், "கழுத்திலிருந்து மொட்டை" என்று வேறு அர்த்தங் கற்பித்து விடைகூறினர். இங்ஙனம் பல விதமாக இவ்விருவருக்கும் விவாதம் நடக்கையில், அவற்றைக் கேட்டுக் கொண்டிருந்த வியாசபகவானும், ஜைமினி முனிவரும், மண்டன மிசிரரை நோக்கி, வந்த சந்நியாசியை உபசரிக்க வேண்டியதே உமக்குக் கடன், அவரை விலக்கலாகாதென்று தருமத் நற்புத்திகளைப் புகட்டி, சங்கரரை விஷ்ணு ஸ்தானத்தில் உட்காரவைத்துப் பூசிப்பாயாக என்று கட்டளையிட்டனர். உடனே மண்டனமிசிரர், சங்கரரை விஷ்ணு ஸ்தானத்தில் எழுந்தருளும்படி வேண்டிக்கொள்ள, அப்படியே சங்கரர் ஒப்புக்கொண்டு, விஷ்ணுஸ்தானத்தில் இருந்தனர். பின்னர் மண்டன மிசிரர், சங்கரருக்குச் செய்யவேண்டிய பூஜை முதலியவைகளைச் செய்து நமஸ்கரித்துப் பிக்ஷைக்கு எழுந்தருள வேண்டுமென்று வேண்டிக்கொண்டார். உடனே சங்கரர், நான் வாதபிக்ஷைக்கு வந்திருக்கின்றேனேயன்றி, இந்தப் பிக்ஷைக்கு

வரவில்லை யென்று சொன்னார். அதற்கு அவர், [illegible] யாகட்டும், பிதிர் சிரார்த்தம் முடிந்த பின்னர், வாதபிக்ஷை செய்யலாம் என்று கூறினார். அவ்வாறே ஒப்புக்கொண்டு சிரார்த்தம் முடிந்தவுடன் சங்கர பகவத் பாதரும், மண்டன மிசிரரும் தத்தமது சிஷ்யர்களுடன் வந்து வாத சபையில் எழுந்தருளினார்கள். இவர்க ளிருவரும் மத்தியஸ்தமாக வியா சபகவானையும், ஜைமினி முனிவரையும் இருக்கும்படி கேட்டுக் கொண்டார்கள். அதற்கு அவர்கள், சரஸ்வதிதேவியின் அவதாரமாகிய மண்டனமிசிரரின் தருமபத்தினி, உபய பாரதி தேவியாரையே மத்யஸ்தையாக வைத்துக்கொள்ளுங்கள் என்று சொல்லிவிட்டு மறைந்துவிட்டனர்.

## சரஸ்வதி தேவி உபயபாரதி தேவியாராக அவதரித்த வரலாறு

பிரம்மதேவரே மண்டன மிசிரராக அவதரித்தமையால், சரஸ்வதி தேவியும் அவருக்கு மனைவியாக உபய பாரதிதேவி என்னும் பெயருடன் வந்து அவதரித்தனள். அவதரித்த காரணம் கீழ்வருமாறு :—

பிரம்மதேவருடைய சபையில் துர்வாஸ மாமுனிவர் வேதமோத, அதனிற் பிழைகண்டு சரஸ்வதி நகைத்தனள். அம்மகாசபையில் அங்ஙனம் தம்மை அவமானப்படுத்தின தென்று கோபங்கொண்டு துர்வாஸ மாமுனிவர், சரஸ்வதி தேவியை நோக்கி நீ பூலோகத்தில் மானிடப் பெண்ணாகப் பிறக்கக்கடவது என்று சபித்தனர். சரஸ்வதி தேவி மனம் மிகநொந்து முனிவரைப் பிரார்த்திக்க அவர் இரக்கமுற்று, பிரம்மாவின் அவதாரமாகிய மண்டன மிசிரருக்கு மனைவியாக இருந்து, பின்னர்ப் பரமேசுவர அவதாரமாகிய சங்கர பகவத் பாதாசாரியாரிடம் சாஸ்திர வாதத்தில் தோல்வியடைந்து அதன் பின் சரஸ்வதிதேவி ரூபத்துடன் பிரம்மலோகத்தை யடைவாயாக என்று சாப விமோசனமும் கூறினார். அதன் பின், இப்பூவுலகில் சோண பத்திரை ஆற்றின்கரையில் விஷ்ணுமித்திரர் என்னும் பிராம்மணருக்குப் புத்திரியாய் அவதரித்து, உபய பாரதிதேவி என்னும் பெயர்பெற்று வளர்ந்து, இரேவா நதிக்கரையில், மாஹிஷ்மதி நகரத்திலிருக்கும் ஹிமமித்திரர் என்னும் பிராம்மணரின் புத்திரரும், பிரம்

மாவின் அவதாரமுமாகிய விசுவரூபர் என்னும் மண்டன மிசிரரை விவாகஞ் செய்துகொண்டு, இல்லற ஒழுக்கங்களை நன்றாக நடத்திக்கொண்டிருந்தனள்.

## சங்கரர் மண்டனமிசிரரோடு வாதிடல்

அத்தகைய உபய பாரதி தேவியாரை மத்தியஸ்தை யாக இருக்கவேண்டுமென்று இருவரும் விரும்பினர். அதற்கு உபய பாரதி தேவியும் சம்மதித்து, இரண்டு பூமாலைகளைக் கொண்டுவந்து அவர்க ளிருவருக்கும் போடுவித்து, உங்களிரு வரில், தோல்வி யடைந்தவருடைய மலர்மாலை வாடிப்போகும் என மொழிந்து, தன் வீட்டு வேலைகளை வழக்கம்போலக் கவ னித்துக்கொண் டிருந்தனள். பின்னர், சங்கரர் "யான் இந் தப் பிரசங்கத்தில் வெற்றியடைந்தால் நீர் சந்நியாசம் வாங்கிக் கொள்ளவேண்டும், நீர் வெற்றியடைந்தால் நான் சந்நியாசத் தைவிட்டு கிருகஸ்த னாகின்றேன்" என்னும் நிபந்தனையைக் கூறினார். மண்டன மிசிரரும் அந்த நிபந்தனைக்கு ஒப்புக் கொண்டனர். இந்த நிபந்தனையை உபயபாரதி தேவியும் தெரிந்துகொண்டு அதுவே சரி என்றனள்.

## வேதத்தின் கர்மகாண்ட ஞானகாண்டத்தின் கருத்துகள்

வேதத்திலுள்ள கர்மகாண்டத்தையே முக்கிய மார்க்க மாகக் கொண்டுள்ள ஜைமினி முனிவரா லியற்றப்பட்ட பூர்வ மீமாம்ஸை மதமே மண்டனமிசிரரின் கொள்கையாம். இவர் களின் கருத்துக் கீழ்வருமாறு :—

வேதத்திற் சொன்னபடி நித்திய நைமித்திகாதி கர்மங் களையும், அக்னி ஹோத்திராதி சிரௌத ஸ்மார்த்த கர்மா னுஷ்டானங்களையும் அவசியம் யாவரும் செய்து வரவேண் டும். நாம், செய்த கர்மத்திற்கு அந்தக்கர்மமே பலனைக் கொடுக்கும். நல்ல கர்மாவைப் பண்ணினால் ஸ்வர்க்கம் முதலிய நல்ல பல னும் கெட்ட கர்மாவைப் பண்ணினால் நரகம் முதலிய கெட்ட பலனும் உண்டாகின்றன. இவ்வுலகம் எப்போதும் இப் படியே இருக்கின்றது. சந்நியாசிகள் கர்மாக்களை விட்டபடி யால், கர்ம பிரஷ்டர்களாவார்கள். இவை முதலான கர்ம காண்டக் கொள்கை யுடையவர்கள் பூர்வ மீமாம்ஸகர்கள்.

வேதத்திலுள்ள கர்மகாண்டமானது, வேதத்தின் ஞான காண்டத்திற்குச் சாதனமாம். ஆகவே, வேதத்திலுள்ள ஞான காண்டத்தையே முக்கிய மார்க்கமாகக் கொண்டுள்ள வியாச முனிவரா லியற்றப்பட்ட, உத்தர மீமாம்ஸா மதமே சங்கர பகவத்பாதாசாரியரின் கொள்கையாம். இவர்களின் கருத்து கீழ்வருமாறு :—

வேதத்தின் கர்மகாண்டமாகிய பூர்வ மீமாம்ஸையிற் சொன்னபடி நித்திய நைமித்திகாதி சகல கர்மாக்களும் பரமே சுவரப் பிரீதியாகச் செய்யவேண்டும், இப்படிச் செய்வதனால் அந்தக்கரண (மன) சுத்தி யுண்டாவதே அதற்குப் பலமாம். அந்தக்கரண சுத்தி யுண்டான பின்னர், வேதத்தின் ஞான காண்டத்திற் கூறிய பிரஹ்மாத்தும ஐக்கிய முணர்த்தும் பிரஹ்ம ஞானத்தை அனுஷ்டிக்கவேண்டும்; இந்த பிரஹ்ம ஞானத்தால் ஜனன மரணமாகிய சர்வ துக்க நிவிர்த்தியுண் டாகிப் பரமானந்தப் பிராப்தி வடிவ மோக்ஷமுண்டாகும் என் பதாம்.

நாம் செய்த கர்மத்திற்குக் கர்மமே பலன் கொடுக்க மாட்டாது. பலன் கொடுக்கப் பரமேசுவரர் ஒருவர் உண்டு; அவரே பலன் கொடுப்பவர். வேதத்தின் கர்ம காண்டமெல் லாம், வேதத்தின் ஞானகாண்டத்தில் போய் அடங்கியிருக்க வேண்டும்; அப்பொழுதுதான் அதற்குப் பிரயோஜனமுண்டு. வேதத்தின் முடிவாகிய ஞானகாண்டக் கருத்து யாதெனில், பிரஹ்மம் ஒன்றே சத்தியம், ஜக ஜீவ பரம் மித்யை என்பதாம். ஜீவர்களுடைய மனதின்கண் மலம், விக்ஷேபம், ஆவரணம் என்னும் மூன்று குற்றங்களுண்டு; இவற்றுள் மலம் என்பது பாவம்; இதனை யொழிப்பதற்கு, கர்மத்தைப் போதிக்கின்ற வேதம் கர்மகாண்டமெனப்படும்; விக்ஷேபம் என்பது சஞ்சலம்; இதனை யொழிப்பதற்கு, உபாசனையை போதிக்கின்ற வேதம் உபாசனாகாண்டமெனப்படும்; ஆவரணமென்பது மறைப்பு; இதனை யொழிப்பதற்கு, ஞானத்தைப் போதிக்கின்ற வேதம் ஞானகாண்டமெனப்படும். கர்மகாண்டமும் உபாசனாகாண்ட மும் சாதனமென்றும், ஞானகாண்டம் சாத்தியமென்றும் கூறப்படுகின்றன; கர்மோபாசனைகளின் பயன் முடிந்தே

மனத்தூய்மையும் மனவொருமையுமாம்; இவை ஞானத்திற்குச் சாதனம்; ஞானத்தின் பயன் ஆவரண நிவிர்த்தியும், அகண்ட சிவமாய் நிற்றலுமாம்; ஆதலின், கர்மகாண்டப் பொருளும் உபாசனாகாண்டப் பொருளும் முடிவானவையல்ல; ஞானகாண்டப்பொருளோ, பிரஹ்மசூத்திரம், உபநிஷத்துகள், பகவத்கீதை முதலிய வேதாந்த சாஸ்திரங்களால் உணர்த்தப்படும் ஜீவப்பிரஹ்ம ஐக்கியத்தால் உண்டாகும் அகண்ட பிரஹ்ம சாக்ஷாத்காரத்தை யடைவிப்பதால் இதுவே முடிவான பொருளாம். இவை முதலான ஞானகாண்டக் கொள்கையுடையவர்கள் உத்தர மீமாம்ஸகர்கள்.

இத்தகைய கொள்கைகளுடன் கூடிய சங்கர பகவத்பாதாசாரியருக்கும் மண்டன மிசிரருக்கும் ஐந்தாறு நாட்கள் சாஸ்திரவாதந் தொடர்ச்சியாய் நடந்தது. கடைசிநாளில் மண்டன மிசிரர் கழுத்திலுள்ள பூமாலை வாடிக் குறுகிவிட்டது. உடனே உபயபாரதி தேவி, இரண்டு பேரையும் நமஸ்கரித்து, இரண்டுபேரும் பிக்ஷைக்கு எழுந்தருளவேண்டும் என்று சொன்னாள். அப்போது சபையிலுள்ள யாவரும் மண்டன மிசிரர் தோல்வி யடைந்தனரென்றும், சங்கர பகவத்பாதாசாரியர் வெற்றி யடைந்தனரென்றும் உணர்ந்தார்கள். உடனே மண்டன மிசிரர், ஆசாரியரை நமஸ்கரித்து சந்நியாசங் கொடுத்தருளல் வேண்டுமென்று பிரார்த்தித்தனர்.

## சங்கரர் உபயபாரதி தேவியாரோடு வாதிடல்

அப்போது, சரஸ்வதியின் அவதாரமாகிய உபயபாரதி தேவியார் ஆசாரியரை நோக்கி, கணவனும் மனைவியும் உடல் வேறாயினும் ஓருயிரெனக் கருதப்படுகின்றமையால், என் கணவனை வென்றதனால் மாத்திரமே தங்களுக்கு வெற்றி சித்திக்காது. வெற்றி பூரணமாக வேண்டின், என்னையும் சாஸ்திரவாதத்தில் வெல்லவேண்டும் என்று உபயபாரதி தேவி ஆக்ஷேபித்து, சங்கர பகவத்பாதாசாரியருடன் பதினேழு நாட்கள் வாதத்திற்கு நின்றனள். அந்த வாதத்தில் அநேக சாஸ்திர சம்பந்தமான வினாக்களுக்கெல்லாம் ஆசாரியர் தக்க விடைகள் கூறினார். பின்னர், இவளை எவ்வகையிலாவது

டக உபயபாரதி தேவி மன்மதன் கலைகள் எத்தனை? ஆண்களிடத்தும், பெண்களிடத்தும் அந்தக் கலைகள் எவ்வாறு? என்பன முதலிய காமசாஸ்திர சம்பந்தமான பல கேள்விகளைக் கேட்டனள்.

## சங்கரர் பரகாயப் பிரவேசம்

அதைக்கேட்ட ஆசாரியர், இதற்குப் பதிற் சொன்னால், சந்நியாச தருமங் கெடுகின்றதென்று எண்ணி, ஒரு மாதத் தவணையில் விடை கூறுவேனென, உபயபாரதி தேவியாருக்குச் சொல்லிவிட்டு, ஆசாரியர் அவ்விடம் விட்டு நீங்கித் தமது மாணாக்கருடன் காட்டிற்சென்று, ஒரு மலைக் குகையில் தங்கி, தம் உடம்பை மாணாக்கரின் வசம் ஒப்புவித்து, அந்தச் சமயத்தில் வேட்டைக்கு வந்து உயிர்நீங்கிய அமருகன் என்னும் மகாராஜனுடைய தேகத்தில், பரகாயப் பிரவேசம் என்னும் யோக வித்தையின் பலத்தினாற் புகுந்து, சுகாதிகளை நேரிற் கண்டு 'அமருகம்' என்னும் பெயருள்ள ஒரு காமநூலையுமியற்றி, இராஜ்யத்தை ஆண்டு கொண்டிருந்தனர். அரசனிடத்துப் புதிதாகத் தோன்றிய பாண்டித்தியத்தையும், வாக்குத் தோரணை சாதுரியம் முதலான திவ்விய குணங்களையும், மிக்க வளப்பம் பொருந்தி நாடு இருப்பதையும் அரசன் மனைவி குறிப்பால் உணர்ந்து, யாரோ ஒரு மஹாத்மா பரகாயப் பிரவேசஞ் செய்திருக்கக் கூடுமென்று, ஊகித்துத் தன் அநுமானத்தை மந்திரிகளுக்குத் தெரிவித்தாள். அதைக்கேட்ட மந்திரிகள் எங்கேனும் உயிர் நீங்கிய உடல் காணப்படின் அதனை, உடனே தகனஞ்செய்கவென, ஏவலாளர்களுக்குக் கட்டளை யிட்டனர்.

இங்கிவ்வாறாக, முன் ஆசாரியர் சொற்படி தேகத்தைக் காத்திருந்த பத்மபாதர் முதலிய மாணாக்கர்கள், ஆசிரியர், கூறிய தவணையில் வாராதது கண்டு, அவருடைய சரீரத்தைக் குகையிலேயே மறைத்துவைத்து, அங்குச் சில மாணாக்கர்களைப் பாதுகாத்திருக்கும்படி கூறிவிட்டுத் தாம் இசைப்புலவர் வேடம்பூண்டு, ஆசிரியரைத் தேடி நகரத்திற் சென்று அமருக ராஜசபையில் வந்து, இன்னிசைக் கீதத்தைக் கீழ் வரும் பொருள் விளங்குமாறு பாடினார்கள் :—

"ஓ இராஜனே! நாங்கள் சாதாரண புருஷனல்ல, இது வன்று இதுவன்று என்பது முதலிய வேத வாக்கியங்களால் உருவப்பொருள் அருவப்பொரு ளெல்லாவற்றையும் நன்கு விலக்கி, தள்ளப்படாததும் அனைத்தையும் தன்னுள் அடக்கியது மாகிய எப்பொருளை மஹான்கள் நாமாகவே யறிகின்றார்களோ, அந் தத் தத்துவமசி என்னும் தத்துவப்பொருளே நாங்களாகு ன்றீர்கள்"

என்றிவ்வாறு தத்துவமசி என்னும் மஹாவாக்கியத் தத்துவத் தைக்கூறும் பாடல்களை அந்த அரசர் கேட்டு, ஞான வைராக்கியம் தோன்றப்பெற்று, வந்தவர்கள் தம் சீடர்களென உணர்ந்து, அவர்களை மனத் திருப்தியுடன் அனுப்பிவிட்டனர். பின்னர், ஆசாரியர் அமருக ராஜனுடைய தேகத்தைவிட்டு, முன்னர்த் தாம் குகையில் விட்டிருந்த உடலிற் பிரவேசித்தனர். இத னிடையே, மந்திரியின் ஏவலாளர்கள் ஆசாரியரின் தேகத்தைத் தீமூட்டி யிருந்தமையால் அவ்வுடல் எரிந்து கொண்டிருந்தது. அவ்வுடலிற் பிரவேசித்த சங்கர பகவத்பாதர் அக்கினியைத் தணித்தற் பொருட்டு நரசிம்ம மூர்த்தியைப் [illegible]

"ஸ்ரீமத் பயோநிதி நிகேதந சக்ரபாணே
போகீந்த்ர போக மணிரஞ்ஜித புண்யமூர்த்தே
யோகீச சாச்வத சரண்ய பவாப்திபோத
லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ மமதேஹி கராவலம்பம்"

"శ్రీమత్పయోనిధినికేతన చక్రపాణే
భోగీన్ద్ర భోగమణిరంజిత పుణ్యమూర్తే
యోగీశ శాశ్వత శరణ్య భవాబ్ధిపోత
లక్ష్మీనృసింహ మమ దేహి కరావలమ్బమ్"

பொருள் :—திருப்பாற் கடலிற் பள்ளிகொண் டிருப்பவரே, சக்கராயுதம் தாங்கினவரே, ஆதிசேஷனது படாமணி களால் அலங்கரிக்கப்பெற்ற புண்ணிய மூர்த்தியே, யோகீசுவர ரே, நித்தியமானவரே, சரண் புகத் தகுந்தவரே, பவக்கடலுக்

குந் தெப்பமானவரே, லக்ஷ்மீ நரசிம்மமூர்த்தியே எனக்கு நீர் கைகொடுத் தருள்புரிவீராக.

இவ்வாறு நரசிம்ம துதிகளைச் செய்தபின்னர், மஹா விஷ்ணுவானவர் இலக்ஷ்மீ நரசிம்மராக ஆசாரியர் முன் தோன்றி, கைகொடுத்து மேல் தூக்கிவிட்டுத், தழுவி யருளிப் போயினார். அதனால் சங்கரர் மேனி திவ்விய தேகமாயிற்று. அத்தருணம் மாணாக்கர்களும் வந்து சேர்ந்தனர். அவர்களை ஆதரித்துத், தம்முடன் அழைத்துக்கொண்டு, வான் வழியால் மண்டன மிச்ரருடைய வீட்டை யடைந்தனர். அப்போது மண்டனமிச்ரர், ஆசாரியரைக்கண்டு, அர்க்கிய முதலிய கொடுத்து அர்ச்சித்து வணங்கி நின்றனர். உபயபாரதி தேவியும் வணங்கி நின்று, ஆசாரியர் அமருக ராஜன் தேகத்தில் நடத்திய சரித்திர முணர்ந்து வியந்து வேதவாக்கியங்களால் துதித்தனள். அப்போது சங்கரர் "அமருகம்" என்னும் காம நூலை வரும்படி சங்கற்பிக்க, அவ்வண்ணமே "அமருகம்" என்னும் நூல் வான் வழியாகவந்து அச்சபையில் விழுந்தது. அதைக்கண்டு சரஸ்வதி அவதாரமாகிய உபய பாரதி தேவி பெரு வியப்படைந்து, சங்கர பகவத் பாதாசாரியருக்கு முழு வெற்றியைக் கூறினள். உடனே பிரம்மலோகத்திற்குச் செல்ல முயன்ற சரஸ்வதிதேவியை, ஆசாரியர் நோக்கித் துதித்து, எம்மால் ஏற்படுத்தப்படும் சிருங்ககிரி முதலிய இடங்களில் சாரதாதேவி என ஆராதிக்கப்பட்டுத் தம்மைச் சரணடைந்த நல்லோர்களுக்குச் சாந்நித்தியமாய் அருள்செய்து வருவீராக என்று கூறினர். அதைக்கேட்ட சரஸ்வதிதேவி அவ்வண்ணமே யாகுக, என உடன்பட்டுக்கொண்டு தாம் விரும்பிய பிரம்மலோகத்திற்குச் சென்றனள்.

பின்பு மண்டன மிச்ரர், விதிப்படி சங்கர பகவத் பாதாசாரியரிடம் சந்நியாசம் பெற்றுக்கொண்டு, மகா வாக்கிய உபதேசங் கேட்டு ஸுரேச்வராசாரியர் என்னும் தீக்ஷா நாமம் பூண்டவராய் அவ்வாசிரியரின் மாணாக்கர்களுக்குத் தலைவராயினார். பின்னர், அவ்வூர் அரசனும் அங்குள்ள மற்ற யாவரும் சங்கரருடைய மதத்தைத் தழுவினார்கள். ஆத்மஞானமே பரம புருஷார்த்தமென்று ஆசாரியர் வற்புறுத்தினராயினும்,

அல்லது, எல்லா முணர்ந்த பிரஹ்ம ஞானியின் தலையையாகி லும், பலியாகத் தந்தால் உன் விருப்பம் பலிக்கும்'' என்று கூறினர். அரசன் தலை எனக்குக் கிடைக்காது; ஆகலால், தங்கள் தலையை எனக்குத் தந்தருள வேண்டும். அதனைக் கொடுப்பதனால் தங்களுக்கு ஒருவித நஷ்டமுமில்லை என்று யாசித்தான். அதுகேட்ட சங்கரர், "கானல் நீரை யார் குடித் துச் சென்றாலென்னை? எனக்கு யாதொரு குறைவுமில்லை; உன் கருத்தின்படி செய்துகொள்க" என்று கூறிச் சங்கரர் கண்மூடிச் சமாதி நிஷ்டையிலிருந்தார். அப்போது அக் காபாலிகன், சங்கரருடைய தலையை வெட்ட எண்ணிக், கத்தி யை எடுத்துக்கொண்டு அவரருகிற் சென்று கையை யோங்கி னன். அதற்குள் பத்ம பாதாசாரியர் அங்கு அகஸ்மாத்தாக வந்து பெருங் கோபத்தோடு ஹுங்கார சத்தஞ்செய்து "நர சிம்ம" என்று சிந்தித்தனர். உடனே பத்மபாதர் மீது நர சிம்ம ஆவேசமுண்டாய், உக்கிர நரசிம்மமூர்த்தி தோன்றி அந்தக் காபாலிகனைக் கிழித்தெறிந்தது. பின்னர்ச் சங்கரர், நிஷ்டை கலைந்தெழுந்து, நரசிம்ம மூர்த்தியைத் துதிக்க, அம் மூர்த்தி சாந்தமடைந்தது. அதன்பின்பு, பத்மபாதரை நோக் கிச் சங்கரர், உன்மீது நரசிம்மந் தோன்றுவதற்கு யாதுகாரண மென்று கேட்க, அதற்கு அவர், முன்னொரு காலத்தில் நாம் அஹோபல பர்வதக் குகையில் தவஞ்செய்திருக்கும்போது, நர சிம்ம மூர்த்தி பிரஸன்னராகி "நீ சிந்திக்கும் சமயத்தில் அனு க்கிரகம் புரிகின்றோம்" என்று கூறி மறைந்தனர். ஆதலால் இப்போது என்மீது தோன்றி யருளினர்; என்று பத்மபாதர் கூறி நமஸ்கரித்திருந்தனர். அங்கு பலரும் கேட்டு ஆனந் தத்தில் மூழ்கியவ ரானார்கள். இச்சரித்திரத்தை எப்போ தும் பக்தியால் படிப்போருக்கும் கேட்போருக்கும் அவமிருத் யு முதலியன ஒழிந்து மேன்மை யுண்டாகுமென்பது திண்ணம்.

## சங்கரர், இறந்த வேதியச் சிறுவனை யெழுப்பியது

அங்கிருந்து சங்கரர் புறப்பட்டு, கோகர்ணம், ஹரிசங்கர க்ஷேத்திரங்களிலுள்ள மூர்த்திகளை அர்ச்சித்துத் துதித்து மூகாம்பிகை க்ஷேத்திர மடைந்தனர். அங்கு கொல்லூர் என்

னும் ஊரில் அகால மரணமடைந்த வேதியச் சிறுவனுடைய தாயாரும் தந்தையும் மனம் புழுங்கிச் சங்கரரை யடைந்து, பிரார்த்தித்து அழுதுக்கொண்டிருந்தனர். அவர்கள் துன்பம் நோக்கிச் சங்கரருக்குத் தயவுண்டாய், அங்கு இறந்துகிடந்த சிறுவனை உயிர்ப்பித்து எழுப்பி யருளினர். யாவருங் கண்டு களிப்பும் வியப்பு மடைந்தனர். அதன்பிறகு சங்கரர், ஸ்ரீ மூகாம்பிகையைத் தரிசித்துத் துதிசெய்து அவள் அருள்பெற்று, அங்கு யாவருக்கும் மூகாம்பிகையின் உண்மைத் தத்துவமான ஆத்ம ஞானத்தைப் போதித்திருந்தனர்.

## சங்கரர் அஸ்தாமலகரைச் சந்தித்தல்

அதன்பிறகு, சங்கரர் அங்கிருந்து புறப்பட்டு ஸ்ரீபலிபுரம் என்னும் அக்கிரஹாரத்தை யடைந்து அங்கு பிக்ஷை செய்துகொண்டு சிலநாள் தங்கி இருந்தனர். அவ்விடத்தில் பூர்வ மீமாம்ஸை என்னுங் கர்மகாண்டத்தை யனுஷ்டிக்கும் இரண்டாயிரம் வேதியரும் அவர்களுக்குத் தலைவரான பிரபாகர பட்டரும் சாஸ்திர வல்லவராக இருந்தனர். அந்தப் பிரபாகர பட்டருக்கு ஒரு ஊமைக்குழந்தை உதித்திருந்தது. அதனால் அவர், தன் புத்திரன் ஊமையாயிருப்பதைச் சகியாமல் அந்தப் பிள்ளையைச் சங்கரரிடம் அழைத்துவந்து அவருடைய பாத கமலங்களில் வணங்கச் செய்தனர். அப்போது சங்கரர், கருணையோடும் அச்சிறுவனைத் தூக்கி நிறுத்தினர். "இச்சிறுவன் ஊமையாக இருக்கின்றான்; ஆனால், [illegible] உபநயன மாத்திரம் செய்து வைத்தேன்; வேதசாஸ்திரம் ஓதுவித்தால் ஓதமாட்டான்; அடித்தால் கோபிக்கவுஞ் செய்யான்; விளையாடவு மாட்டான்; இறைவரே! இச்சிறுவன் ஊமையாயிருப்பது யாது காரணமோ அறியேன்; தாங்கள் அருள்புரிய வேண்டுகிறேன்" என்று அவர் வணங்கி விண்ணப்பித்தார். அதுகேட்ட சங்கரர் அச்சிறுவனைத் தயவால் நோக்கி, "நீயார்? ஏன் இவ்வாறு ஜடன்போலிருக்கின்றனை?" என்று வினவினர். அதற்கு அச்சிறுவன், பின்வருமாறு மறுமொழி கூறினன்.

"நாஹம் ஜட: கிம்து ஜட: ப்ரவர்த்தகே
மத்ஸந்நிதானேன நஸந்தி ஷேமகுரோ

ஷடூர்மி ஷட்பாவ விகாரவர்ஜிதம்
ஸுகைகதானம் பரமஸ்மி தத்பதம்."

"నాహం జడః కింతు జడః ప్రవర్తతే
మత్సన్నిధానేన నసందిహే గురో।
షడూర్మి షడ్భావ వికార వర్జితమ్
సుఖైకతానం పరమస్మి తత్పదమ్॥"

இதன்பொருள்:—ஆசிரியரே! யான் ஜடன் அல்லன்; மற்றோ, ஜடங்களனைத்தும் எனது ஸந்நிதானத்தில் தொழிற் படுகின்றன; இதில் யான் சிறிதும் சந்தேகிக்க மாட்டேன்; மற்றும், ஜனனம், மரணம், பசி, தாகம், சுகம், துக்கம் முதலிய ஆறு அலைகளையும்; பிறத்தல், இருத்தல், வளர்தல், மாறுதலடைதல், குறைவடைதல், நாசமடைதல் முதலிய ஆறு விகாரங்களையுங் கடந்த ஆனந்தப் பிழம்பாகிய பரமாத்ம சொரூபமே நானா யிருக்கின்றேன்.

இவ்விதமாகத் தமது சச்சிதானந்த அத்துவித சொரூப சித்தியைக் குறிக்கத்தக்க அநுபவத்தினைப் பன்னிரண்டு சுலோகங்களாற் கூறினார். எழுத்தின் வாசனையே யறியாத சிறுவன் வாயில் உள்ளங்கையில் நெல்லிக்கனியைக் காட்டுவது போலப் பிரத்தியக்ஷத்தை யுணர்த்தும் சுலோகங்க ளெண்டானது யாவருக்கும் பொருள் விளங்குமாயிற்று. அப்போது சங்கரர், சிறுவனைப் பார்த்து அநுக்கிரகித்து "அஸ்தாமலகர்" என்னும் தீக்ஷாநாமத்தை யளித்து; முக்கிய சீடர்களில் ஒருவராகச் சேர்த்துக்கொண்டனர். இவரை வாயு தேவதையின் அவதாரமென்று சொல்வார்கள். பின்னர்ச் சங்கரர், இந்த அஸ்தாமலகரைத் தம்முடன் அழைத்துக்கொண்டு மற்றைய சீடர்களுடன் அங்கிருந்து வெளிப்பட்டனர்.

## சங்கரர் சிருங்ககிரியை யடைதல்

இவ்வாறு தேசந்தோறும் பிரயாணஞ்செய்துகொண்டு ஆசாரிய சுவாமிகள் சிருங்ககிரிக்கு வந்தனர். அங்கு துங்க பத்திரை யென்னும் ஆற்றங்கரையில், பிரசித்தமான மஹரிஷி

என்னுங் கலைக்கோட்டு முனிவர், காசிபர், வசிஷ்டர், பராசரர் முதலிய மஹரிஷிகள் தவம்புரிந்த சிறப்புவாய்ந்த இடமென்றுணர்ந்து, அங்குத் தங்கிப் பெரிய ஆலயமொன்றமைத்து ஸ்ரீ சாரதாம்பிகையைப் பிரதிஷ்டைசெய்து, என்றும் பூஜை, விழா முதலியவைகள் நடக்கும்படி திட்டஞ்செய்து, அதன் பின் அங்கு ஓர் மடமொன்று அமைத்து, சாரதாபீடம், வியாக்கியான சிம்மாசனம், பாரதீ சம்பிரதாயம் முதலியவைகளை ஸ்தாபித்து, அப்பீடத்திற்கு சுரேசுவராசாரியராகிய தமது மாணாக்கரைத் தலைவராக்கி யருளி, அப்பீடத்தில் வரும் பரம்பரையார் ஜகத்குருவாக யிருக்கும்படி ஆசீர்வதித்தனர். இந்நற்காரியஞ் சாதிப்பதற்கு அவ்வூர் அரசனாகிய வீரசேனனென்பான் ஆசாரியருக்குப் பெரிதும் உதவி புரிந்தனன். அதுமுதல் அச்சிருங்ககிரி வித்தியாபீடத்தில் ஸ்ரீ சாரதாம்பிகை வீற்றிருந்து, தம்மை வழிபடுபவர்களுக்கு வரங் கொடுத்து வருகின்றனர்.

### சங்கரர் ஆனந்தகிரி என்னும் மாணாக்கருக்கு அருள்புரிதல்

இவ்வாறு ஆசாரிய சுவாமிகள் சிருங்ககிரி மடாலயத்தில் எழுந்தருளி, யாவருக்கும் அநுக்கிரகஞ் செய்து கொண்டிருக்கும்போது, குரு பணிவிடைகளில் மிகப் பக்தியுடையவரான "ஆனந்தகிரி" என்னும் மாணாக்கர், இச்சங்கர பகவத் பாதாசாரியர் சந்நிதியை யடைந்து, உடம்பை நிழல் பற்றிச் செல்வதுபோல ஆசாரிய சுவாமிகளின் கருத்தை யுணர்ந்து அவாமலே சிறந்த தொண்டுகளைச் செய்து வந்தனர். ஒருநாள் மாணாக்க ரெல்லாரையும் வைத்துக்கொண்டு வேதாந்த பாடம் ஆரம்பிக்கும் சமயத்தில், ஆனந்தகிரி யென்னும் மாணாக்கர், ஆசிரியரின் காஷாய வஸ்திரத்தைச் சுத்தஞ்செய்து வர ஆற்றுக்குப் போயிருந்தார். அப்போது, மற்ற மாணாக்கர்கள், பாடத்தை ஆரம்பிக்கும்படி பிரார்த்தித்து நிற்கையில், "ஆனந்தகிரி வரட்டும்" என்று ஆசாரியர் கட்டளை யிட்டருளினர். அப்போது பத்மபாதர் வணங்கி, சுவாமி! அவர் செய்யுந் திருப்பணி செய்துகொண்டே யிருக்கின்றனர். அவர் வாராமை எங்கள் பாடத்திற்குத் தடையாகலாமா? என்று வினவினர். அதற்கு ஆசாரிய சுவாமிகள், பத்மபாதருக்கு அச்செருக்குந்

தொலையும்பொருட்டுத், தம்து அன்பராகிய ஆனந்தகிரிக்கு, வேத சாஸ்திரங்களாகிய பதினான்கு வித்தையும் வரும்படி மனதினுற் கருணையோடு கிருபை செய்தனர். உடனே ஆனந்தகிரிக்கு எல்லா வேத சாஸ்திரங்களும் வந்துவிட்டன. பின்னர், ஆனந்தகிரி ஆசாரிய சுவாமிகளிடம்வந்து வணங்கி நின்று கீழ் வருமாறு தோடக சந்தத்தால் குருஸ்துதி செய்தனர்.

## ஸ்ரீ சங்கர பகவத் பாதாசாரிய சுவாமிகள்
## அஷ்டகமென்னுந் தோடக சந்தத் தோத்திரம்

*விதிதாகில சாஸ்த்ர ஸுதா ஜலதே*
*மஹிதோபநிஷத் கதிதார்த்த நிதே*
*ஹ்ருதயே கலயே விமலம் சரணம்*
*பவசங்கர தேசிகமே சரணம்.* 1

విదితాఖిల శాస్త్ర సుధా జలధే
మహితోపనిషత్కథితార్థ నిధే,
హృదయే కలయే విమలం చరణం
భవ శంకర దేశిక మే శరణమ్.

*பொருள் :— அறியப்பட்ட எல்லா சாஸ்திரங்களுக்கும் திருப்பாற்கடல் போன்றவரே! மேன்மைபொருந்திய உபநிஷத்துகளாற் பிரதிபாதிக்கப்பட்ட அர்த்தங்களுக்கு இருப்பிடமானவரே! தேவரீருடைய பரிசுத்தமான திருவடிகளை இருதயத்தில் தியானிக்கின்றேன்.*

*பவசங்கரதேசிகமே சரணம்=சுகமளிக்கும் ஆசிரியரே! எனக்குப் புகலிடம் ஆவீராக.*

*கருணா வருணா லயபா லயமாம்*
*பவசாகர துக்க விதூன ஹ்ருதம்*
*ரசிதாகில தர்பண தத்வ விதம்.* (பவ சங்கர) 2

కరుణా వరుణా లయపా లయ మాం
భవసాగర దుఃఖవిదూన హృదమ్,
రచితాఖిల దర్శనతత్త్వవిదం. (భవ శంకర) 2

இ - ள். அருள்நிறைந்த ஆலயமே! ஜனன மரண சமுத்திரத்தில் துக்கத்தால் அலைகின்ற சித்தத்தையுடைய என்னைக் காப்பாற்றியருள்வீராக. சகல சாஸ்திரங்களின் உண்மையை உணர்பவனாக என்னைச் செய்தருள்வீராக. 2

பவதா ஜனதா ஸுஹிதா பவிதா
நிஜபோத விசாரணை சாருமதே
கலயேச்வர ஜீவ விவேக விதம் (பவ சங்கர) 3

భవతా జనతా సుహితా భవితా
నిజబోధ విచారణ చారుమతే,
కలయేశ్వరజీవవివేకవిదం. (భవ శంకర) 3

இ - ள். தங்களால் ஜனத்திரளானது சுகமுள்ளதாய்ச் செய்யப்பட்டது. ஆத்மஞானத்தை விசாரிப்பதில் அழகான மதியையுடையவரே! ஜீவேசுவரர்களை விசாரித்தறியும் ஞானமுடையவனாக என்னைச் செய்தருள்வீராக. 3

பவ ஏவ பவானிதி மே நிதராம்
ஸமஜாயத சேதஸி கௌதுகிதா
மமவாரய மோஹ மஹாஜலதிம் (பவ சங்கர) 4

భవ ఏవ భవానితి మే నితరాం
సమజాయత చేతసి కౌతుకితా,
మమ వారయ మోహమహాజలధిం. (భవ శంకర) 4

இ - ள். தேவரீரே பரமேசுவரரென்று என்மனதில் ஆனந்தமுண்டாகின்றது. என்னுடைய மோகமாகிய பெருங்கடலை நீக்கியருள்வீராக. 4

ஸுக்ருதே திக்ருதே பஹுதா பவதோ
பவிதா பததர்சன லாலஸதா
அதிதீனமிமம் பரிபாலய மாம் (பவ சங்கர) 5

సుకృతేఽధికృతే బహుధా భవతో
భవితా పదదర్శన లాలసతా,
అతిదీనమిమం పరిపాలయ మాం (భవ శంకర) 5

இ - ள். ஓ புண்ணியமூர்த்தியே! உலகங்களை யாள்பவரே! தேவரீரிடமிருந்து சமதிருஷ்டியாகிய சந்தோஷமானது பல பிரகாரமாக அனைவருக்கும் உண்டாயிற்று. மிகத் துக்கியாகிய இந்த என்னைக் காப்பாற்றி யருள்வீராக. 5

ஜகதீ மவிதும் கலிதா க்ருதயோ
விசரந்தி மஹா மஹஸச்சலத:
அஹிமாம் ஶுரிவாத்ர விபாஸி குரோ (பவ சங்கர) 6

**జగతీమవితుం కలితాకృతయో**
**విచరంతి మహామహసశ్ఛలతః,**
**అహిమాంశురివాత్ర విభాసిగురో.** (భవ శంకర) 6

இ - ள். ஓ குருமூர்த்தியே! உலகங்களை இரட்சித்தருளத், தேவரீருடைய மஹாமஹிமை வாய்ந்த திருவிளையாடல்கள் உன்னதமாய் விளங்குகின்றன. தேவரீரும் இங்கு சூரியனுக்குச் சமானமாக விளங்குகின்றீர். 6

குருபுங்கவ புங்கவ கேதன தே
ஸமதா மயதாம் நஹி கோபிஸுதீ:
சரணாகத வத்ஸல தத்வநிதே (பவ சங்கர) 7

**గురుపుంగవ పుంగవకేతన తే**
**సమతామయతాం నహి కోఽపి సుధీః,**
**శరణాగతవత్సల తత్త్వనిధే.** (భవ శంకర) 7

இ - ள் தங்களிடம் அடைக்கலம் புகுந்தவரிடத்தில் அன்புடையவரே! உண்மைப்பொருளுக் கிடமானவரே! ஓ குரவர் சிகாமணியே! மேலோருக்கும் மேலாயிருப்பவரே! தேவரீருக்குச் சமானமாந்தன்மையை விரிவாகத்தெளிந்த எந்த அறிஞனும் அடைந்ததில்லை. 7

விதிதா நமயா விஶதைககலா
நச கிஞ்சன காஞ்சன மஸ்தி குரோ
த்ருதமேவ விதேஹி க்ருபாம் ஸஹஜாம் (பவ சங்கர) 8

**విదితా న మయా విశదైకకలా**
**న చ కించన కాంచన మస్తి గురో,**

ద్రుతమేవ విధేహి కృపాం సహజాం. (భవ శంకర) ౪

இ - ள். ஓ குருமூர்த்தியே! ஒரு சாஸ்திரமேனும் தெளிவுடைய தாய் என்றால் அறியப்படவுமில்லை; சிறிது பொன்னுமில்லை; தங்களுடன் பிறந்த கருணையைச் சீக்கிரம் தந்தருள்வீராக. 8

சுருதிஸ்மிருதி புராணானு மாலயம் கருணாலயம்
நமாமி பகவத்பாதம் சங்கரம் லோகசங்கரம்.

శ్రుతిస్మృతి పురాణానాం ఆలయం కరుణాలయమ్ ।
నమామి భగవత్పాద శంకరం లోకశంకరమ్ ॥

இ - ள். சுருதி ஸ்மிருதி புராண மிவைகளுக்கு இருப்பிடமானவரும், கருணைக்கு இருப்பிடமானவரும், உலகத்திற்குச் சுகமளிப்பவருமாகிய சங்கர பகவத்பாதாசாரியரை நமஸ்கரிக்கின்றேன்.

சங்கரர் தோடக சந்தத் தோத்திரம் முடிந்தது.

இவ்வாறு ஆனந்தகிரி யென்பவர் ஆதிக்கு, தோடக சந்தத்தால் வேத முடிப்பொருளை யுணர்த்தப்படுவதான "வேத சார சமுத்தரணமாகிய தோடகம்" என்னும் தோத்திரத்தை ஆசாரிய சந்நிதானத்திற் பாடினார். அதனால், குருபக்தி விடையின் பெருமையை யறிந்து பத்மபாதர் முதலிய மாணாக்கரனைவருங் கல்விச் செருக்கினை முற்றும் ஒழித்தனர். குரு பக்தியால் அவர் வாயினின்றும் முதலில் தோடக சந்த விருத்தம் வந்தமையால் அவருக்குத் "தோடகாசாரியர்" என்னும் பெயரை யளித்தனர். இவர் அக்கினி தேவதையின் அவதாரமென்று சொல்லப்படுவர். அது முதல் அவரும் ஓர் முக்கிய மாணாக்கராயினர். அந்தச் சங்கர பகவத் பாதாசாரியரின் மாணாக்கர் பல்லாயிரம் பேர்களுள், சுரேசுவரர், பத்மபாதர், அஸ்தாமலகர், தோடகர் என்ற இந்நால்வரும் நான்கு திசையினையும் வெல்லத்தக்க ஆற்றலுடையவராய்ச் சிறப்புற்றுக் குருபணி செய்திருந்தனர்.

சங்கரின் மாணவர்கள் சாஸ்திர மியற்றல்

அதன்பிறகு, சங்கர பகவத் பாதாசாரியர் தாம் செய்த உத்தர மீமாம்ஸை யென்னும் பிரஹ்ம சூத்திர பாஷியத்திற்கு

வார்த்திகம் என்னும் ஓர் விரிவுரையைச் சுரேசுவராசாரிய ரைக் கொண்டு செய்விக்க முயல, சிற்சுகாசாரியர் முதலான சீடர்கள், சுரேசுவராசாரியர் பூர்வ மீமாம்ஸையில் சிரத்தை யுள்ளவ ராகையால் பிரஹ்ம சூத்திர பாஷியத்திற்கு விரி வுரை செய்வாராயின், தத்துவ ஞானப் பிரதானமான பாஷி யத்தைக் கர்மானுஷ்டானப் பிரதானமாக வர்ணிப்பரேயென்று தடைசெய்து, பத்மபாதாசாரியரால் பிரஹ்ம சூத்திர பாஷி யத்திற்கு விரிவுரை செய்விக்கும்படி பிரார்த்தித்தனர். அங் ஙனமே ஆசாரியர், பத்மபாதாசாரியரை, பிரஹ்ம சூத்திரத் திற்கு விரிவுரை செய்யும்படி கட்டளை யிட்டனர். பின்னர் ஆசாரிய சுவாமிகள், சுரேசுவராசாரியரைப் பார்த்து, நீர் ஓர் வேதாந்த பிரகரண சாஸ்திரம் செய்வீராக என்று ஆஞ்ஞா பிக்க, அவர் "நைஷ்கர்மிய ஸித்தி" என்னும் வேதாந்த சாஸ்தி ரத்தைச் செய்து ஆசாரியரிடங் கொடுத்து வணங்கினர். ஆசா ரியரும் அந்தச் சாஸ்திரத்தைப் பார்த்து மகிழ்ந்து, இன்னும் நீர் உபநிஷத் பாஷியங்கள் முதலியவைகளுக்கு வார்த்திக வுரைகள் செய்யவேண்டுமென்று கட்டளையிட, அங்ஙனமே உபநிஷத் பாஷியங்கள் முதலிய சாஸ்திரங்களுக்கு வார்த்திக விரிவுரை செய்தனர். ஆயினும், பிரஹ்ம சூத்திர பாஷியத் திற்கு விரிவுரை செய்யும் பிராப்தமில்லாமற் போனதற்கு விசன முற்றிருந்த சுரேசுவராசாரியருக்கு, பிராரப்த கரும வசத்தால் மறுபிறப்பில் வாசஸ்பதியாக அவதரித்து உரைகள் எழுதுமென்று சுவாமிகள் அநுக்கிரகித்தனர். ஆசாரியரின் ஆஞ்ஞைப்படி, பத்மபாதாசாரியர், பிரஹ்ம சூத்திர பாஷியத் திற்கு விஜயடிண்டிமம் என்னும் விரிவுரையை யியற்றி ஆசா ரிய சுவாமிகளிடம் சமர்ப்பித்தனர். தோடகாசாரியர் முதலான மற்ற மாணாக்கர்களும் ஆசாரியருடைய ஆஞ்ஞையால் அத்து விதக் கொள்கையுடன் கூடிய ஞான சாஸ்திரங்களை யியற்றி ஆசாரியரிடம் சமர்ப்பித்தனர். ஆசாரியர் அவைகளைப் பெற் றுக்கொண்டு மாணாக்கர்களை வாழ்த்தினர்.

அப்பால், பத்மபாதாசாரியர் தீர்த்த யாத்திரை செய்து வருவதாக ஆசாரியரிடம் விண்ணப்பஞ்செய்ய, அந்த யாத்தி ரையின் விதி முதலியவைகளைத் தெரிவித்து யாத்திரைக்கு

விடைகொடுத் தனுப்பிவிட்டு, சுரேசுவரர் முதலான மாணாக்கர்களுடன் சிருங்க கிரியிற் சிலநாட் கழித்து வந்தனர்.

### சங்கரர் தமது அன்னையாரிடஞ் செல்லல்

அதன்பிறகு, சங்கரர் யோக நோக்கத்தினால் தமது அன்னையாரின் முடிவு நாளுணர்ந்து, ஆகாயமார்க்கமாய்க் கேரள தேசஞ்சென்று காலடிக் கிராமத்தை யடைந்து, தமது அன்னையாரின் எதிரில் நின்றனர். அந்த அம்மையார் படுக்கையினின் றெழமாட்டாத நிலைமையி லிருந்தனர். அப்போது சங்கரர், பக்தியும் பிரேமையும் பணிவும் மிக்கவராய் அன்னையாரின் பாதங்களில் வணங்கி எழுந்தனர். அருமை மகனாரைப் பார்த்துத் தாயார் அகமகிழ்வுற்று முகமலர்ச்சி காட்டினர். உன்னைப் பார்ப்பதிலும் மேம்பட்ட தொன்றுமில்லை. நீயே என் கருமத்தை முடித்து நற்கதி யடைவிக்க வேண்டும் என்று தெரிவித்தனர். நிர்க்குணப் பிரஹ்ம உபதேசம் அச்சமயம் அவ்வம்மையாருக்கு எட்டாமையால், சகுணோபாசனையை உபதேசித்துச் சிவதுதி செய்தார். உடனே அவ்வம்மையாரின் விழிக்குச் சூலபாணிகளாகிய சிவ கணங்கள் தோன்றினர். "மகனே! நான் இவர்களோடு செல்லமாட்டேன்" என்றார் அம்மையார். பின்னர்ச் சங்கரர், விஷ்ணுமூர்த்தி தியானத்தை உபதேசித்து, விஷ்ணுதுதி செய்தார். உடனே விஷ்ணு தூதர்கள் தோன்றினார்கள். அவ்வம்மையார் தமது புதல்வன் கூறியபடி நாராயண மூர்த்தியையே மனதிற் பாவித்துக்கொண்டு தேகத்தை விடுத்தார். உடனே விஷ்ணு தூதர்கள் அவ்வம்மையாரைத் தெய்வ விமான மேற்றிக்கொண்டு வைகுண்டமென்னும் பரமபதத்தினை அடைவித்தனர்.

பின்பு, சங்கரர் தமது தாயாரின் தேகத்திற்குத் தாமே அந்தியக் கிரியைகளைச் செய்ய விருப்புற்றவராய், சுற்றத்தார்களை யழைத்தனர்; அதற்கவர்கள், துறவியாகிய நீர் அந்திய கர்மம் செய்யலாகாதெனப் பழித்தனர். அக்கிராமத்தார் செய்த ஆக்ஷேபத்தையும், அவ்விஷயத்தில் சுற்றத்தார்களனைவரும், அக்கினியையும் கொடுக்காமல் ஒதுங்கி நின்ற கட்டுப்பாட்டையும் பொருட்படுத்தாமல், சங்கரர், தாமே அன்னையா

ரின் இடக்கையில், தீ யுண்டாக்கித் தனியாகவே தகனக்கிரியை முதலான தாய்க் கடனை முடித்துவிட்டு, "இத்தேசம் சந்நியாசிகள் வருவதற்குத் தகுதியற்ற தாருக" என்று கூறிவிட்டு ஆகாசமார்க்கமாய்ப் புறப்பட்டுச் சையகிரி சமீபத்தி லிருந்தனர்.

அப்போது, பத்மபாதர் காசி இராமேசுவரம் முதலிய தீர்த்த யாத்திரைகளை முடித்துக்கொண்டு, ஆசாரிய சுவாமிகளைத் தேடி அங்குவந்து, சங்கர பகவத்பாதாசாரியரைக் கண்டு தரிசித்து வணங்கி நின்று, தாம் சென்றுவந்த சுக துக்கங்களைக் கூறினுர். சங்கரர் அவரை ஆசீர்வதித்து வாழ்த்தி யருளினுர். பின்னர், பத்மபாதர் தாம் எழுதிய பிரஹ்ம சூத்திர பாஷ்ய விரிவுரை என்னும் விஜயடிண்டிம சாஸ்திரம், ஸ்ரீரங்கத்தில் தமது பூர்வ ஆச்ரம அம்மான் வீட்டில், தீப்பற்றி எறிந்து விட்டதென்று ஆசாரியரிடம் விண்ணப்பிக்க, அதற்கு ஆசாரியர், தாம் முன்னர்க் கேட்டிருந்த வரையில் அந்த விரிவுரையைத் தாமே கூறி எழுதுவித்து, பஞ்சபாதிகை என்று அந்தச் சாஸ்திரத்திற்குப் பெயரிட்டருளினர். அச்செய்தி யுணர்ந்து கேரள தேசத் தரசனுன இராஜசேகரன் என்பவன் வந்து ஆசாரிய சுவாமிகளை வணங்கிநின்று, தன் புத்தகசாலையில் தன் கவித்துவ நூல்கள் தீப்பற்றி எறிந்து விட்டதைக் கூறிக் கவலையுற்று விண்ணப்பித்தான். அப்போது சங்கரர், அவனது நூல்களை யெல்லாங் கூறி உபதேசித் தருளினுர். அதன்பிறகு சுரேசுவரர், பத்மபாதர் முதலான மாணுக்கர்களோடு அங்கிருந்து புறப்பட்டார்.

## சங்கரர் திக்குவிஜயத்தின்பொருட்டுச் செல்லல்

அதன்பின்னர், பத்மபாதர் முதலான ஆயிரக்கணக்கான சிறந்த மாணுக்கர் கூட்டங்களுடன் சங்கர பகவத் பாதாசாரியர் திக்குவிஜயத்தின் பொருட்டு வெளிப்பட்டனர். அப்போது சுதன்வாராஜன் தன் சேனைகளுடன் பின் தொடர்ந்து வர, எல்லாத் திக்குகளிலுள்ள பேதவாதிகளையும் வெற்றிகொள்ளல் வேண்டுமென்னும் விருப்புடையவராய்ப் புறப்பட்டு, முதலில் மத்தியார்ஜுனம் என்னும் திருவிடைமருதூர் வந்து, சிவ தரிசனஞ் செய்து, அங்கு சேர்ந்த ஜனங்க ளனைவருக்குங் கேட்கும்படி அங்குள்ள மகாலிங்கேசுவர மூர்த்தியினின்

றெழும்பிய "சத்தியம் அத்துவிதம்" என்னும் வாக்கியத்தால் யாவருக்கும் நம்பிக்கை வருவித்தனர். அதைக்கேட்டு யாவரும் வியப்புற்று, சங்கர பகவத் பாதாசாரியரையே உண்மையாசிரியரெனக் கொண்டு மாணுக்கரானார்கள். அங்கு வந்து சேர்ந்துள்ள எல்லா மதத்தினர்களுக்கும், தயையோடு அத்துவித ஆத்ம ஞான மார்க்கத்தைப் போதித்து, தெய்வ உயர்ச்சி தாழ்ச்சி முதலிய பேத வாசனைகளைப் போக்கி, மது மாமிசங்களைச் சக்தி முதலிய தெய்வங்களுக்குப் பூசிக்கும் ஆசாரங்களைக் கண்டித்து, சத்துவ பூசை செய்யும்படி திட்டப்படுத்தி, ஜீவ காருண்யம், சத்தியம், சுத்தம் குருவினிடத்திலும் ஈசுவரனிடத்திலும் அபேதமான பக்தி, வைராக்கியம், பிரஹ்ம ஞானம் முதலியவைகளை முறையே சுருதி யுக்தி அனுபவ மூலமாக யாவருக்கும் புகட்டி, வாதிகளனைவரையும் உடன்படுத்தித் தமது மாணுக்கர்களாக்கினர்.

பின்னர்ச் சங்கரர், இராமேசுவரத்திற்குச் சென்று, அங்கு சக்தி பூஜைக்கு மது மாமிசம் வைத்துப் பூசிக்கும் சாக்தேயர்களுக்கு மது மாமிசம் சக்திக்கு வைக்கக் கூடாதென்றும், சத்துவமான வைதிக பூஜையினாலே சக்திதேவியைப் பூசிக்க வேண்டுமென்றும் போதித்து, அவர்களைச் சீர்திருத்தி மாணுக்கர்களாக்கினர். பின்னர், அனந்தசயனஞ்சென்று அங்குள்ளவர்களுக்கு விஷ்ணுமூர்த்தியின் தத்துவங்களைப் போதித்து, சீடர்களாக்கிக்கொண்டு, பின்னும் அநேக தேசங்களிற் சென்று, அங்கங்குள்ள சைவம் (சிவமதம்), வைஷ்ணவம் (விஷ்ணுமதம்), காணுபத்யம் (கணேச மதம்), கௌமாரம் (சுப்பிரமணிய மதம்), சாக்தேயம் (சக்தி மதம்), சௌரம் (சூரிய மதம்) முதலிய ஷண்மதங்களின் உண்மைகளைப் போதித்து, யாவருக்கும் நிர்க்குணப் பிரஹ்மமாகிய கடவுள் ஒருவரே என்னும் அத்துவித ஞானத்தைப் புகட்டிச், மாணுக்கர்களாக்கிக்கொண்டனர்.

பின்னர், பாண்டியநாடு, சோழநாடுகளிலுள்ள அரசர்களைத் தன் வசமாக்கிக்கொண்டு, அநேக தேசாந்திரங்களுக்குச் சென்று ஆங்காங்குள்ளவர்களுக்கு அந்தந்த மதங்களின் உண்மைகளைக் கூறி அத்துவித ஞானத்தை யாவருக்கும்

போதித்துக்கொண்டு ஸ்ரீரங்கத்தில் ஜனாகர்ஷண யந்திரம் ஸ்தாபித்து, ஜம்புகேசுவரத்திற்குச் சென்று, ஆங்குள்ள ஸ்ரீ அகிலாண்டேசுவரியின் உக்கிரக் கலையை, சிவசக்கிரம் ஸ்ரீசக்கிரம் இவைகளைத் தாடங்கமாகப் பிரதிஷ்டைசெய்து சாந்தப்படுத்தினார்.

## சங்கரர் காஞ்சீபுரத்திற் காமகோடி பீடத்தை ஸ்தாபித்தல்

அதன்பின்பு, சிதம்பரம்வந்து சிவகங்கையை யுண்டாக்கி அங்கே அத்துவித ஞானத்தை வெளிப்படுத்தி, காஞ்சீபுரம் வந்து ஸ்ரீ ஏகாம்பர நாதரையும், ஸ்ரீ வரதராஜப் பெருமாளையுந் தரிசித்து, அங்குள்ளவர்களுக்குச் சிவவிஷ்ணுவின் அபேதத்தைப் போதித்து மாணாக்கர்களாக்கிக்கொண்டு அங்குள்ள ஸ்ரீ காமாக்ஷியம்மனின் உக்கிரக்கலையைக் கண்டு ஸ்ரீ சக்கர ஸ்தாபனஞ் செய்து உக்கிரக்கலையை மாற்றிச் சாந்தக்கலையை யுண்டாக்கி, அங்கே காமகோடி பீடத்தை ஸ்தாபித்து, நகரத்தின்கணுள்ள தேவாலயங்களைச் சீரணோத்தாரணஞ் செய்தருளினார். அதன்பிறகு, திருவொற்றியூரில் ஸ்ரீவட்டப்பநாச்சியார் அம்மனுடைய உக்கிரக் கலையைக் கிணற்றி லடக்கிச் சாந்தப்படுத்தியருளினார். பின்னர், அங்கங்குள்ள யாவருக்கும் சமரச ஸன்மார்க்கங்களைப் போதித்துக்கொண்டு சேஷமலையாகிய திருப்பதி க்ஷேத்திரமடைந்து, அங்கே தனகலா யந்திரத்தை ஸ்தாபித்து, ஆந்திர தேசங்களிலுள்ள ஜனங்களுக்கும் அத்துவித ஞானத்தைப் போதித்து மாணாக்கர்களாக்கிக்கொண்டு, விதர்ப்பராஜன் வணங்கிப் பின்வர காபாலியர் நிரம்பியிருக்கும் கர்நாடக தேசத்திற்கு வந்தார்.

## கிருகசன் என்னும் காபாலிகனைத் தண்டித்தது

அவ்விடத்தில் கிருகசன் என்னும் காபாலிகக் குரு, சுடு காட்டுச் சாம்பலைப் பூசிச் சடைவிரித்து, எலும்பை ஆபரணமாகப் பூண்டு, மண்டையோட்டையும், கண்டக்கோடரியையும் கையிற்பிடித்து, மனிதர் தலையைவெட்டிப் பைரவருக்குப் பலி கொடுத்துப் பூசைசெய்து, தன்னைப்போன்ற ஆயுதபாணிகளாயிருக்கும், பன்னீராயிரம் மாணாக்கர்களோடு மலைகளில் வாசஞ்செய்து, ஊரிலுள்ளவர்களைப் பயமுறுத்தி எங்கும் இவ் விதமாகப் பைரவ பூசை வழக்கத்தைச் செய்திருந்தான்.

அந்தக் கிருகசன் என்பவன், சங்கர பகவத்பாதாசாரிய ரால், பைரவ மதம் குறைந்து விட்டதென்று அறிந்து, ஆயுத பாணிகளாகிய சீடர் கூட்டங்களோடு, இவரைக் கொல்லுவ தற்கு மேல்விழுந்து வருகையில், சுதன்வராஜன் தன் படை யோடு வந்து போர்செய்து துரத்தினான். மீண்டும் சங்கரரின் மாணாக்கர்மீது வந்துவிழ, அவர்கள் திசைதப்பி யோட ஆரம் பித்தனர். அதுகண்ட சங்கரர் உங்காரசப்தஞ் செய்தனர். அத னாலுண்டான அக்கினி, காபாலிகக் கூட்டத்தைக் கொளுத்தி விட்டது. அப்போது அந்தக் காபாலிகத் தலைவன், பைரவ ரைத் தியானித்து, கண்டக் கோடரியாற் சங்கரரை வெட்ட வந்தபோது, பைரவர், தன் வடிவாயிருக்குஞ் சங்கரருக்கு அப காரம் எண்ணிய அக்காபாலிகன் தலையையே பறித்துக் கொண்டு, அந்தச் சங்கரரால் துதிக்கப்பட்டு மறைந்துபோயி னர். அதுமுதல், காபாலிக மதம் முற்றும் ஒழியவே, அந்தத் தேசத்தில் எங்கும் சாத்விகமான வைதிகமதம், வேதாந்த சாஸ்திர விசாரமுதலிய சன்மார்க்க ஒழுக்கங்கள் தழைத்துப் பரவிவிட்டன.

அதன்பிறகு சங்கரர், மேற்குக் கடற்கரை வழியாயிரு முள்ள தேசங்கள்தோறுஞ் சென்று நாஸ்திகர் முதலிய பல மதத்தினர்களையுஞ் சீர்திருத்தஞ்செய்து சீடர்களாக்கிக்கொ ண்டு, கோகர்ணமென்னும் ஸ்தலத்தை யடைந்து, மகாபலேச வரரைத் தரிசித்து, அங்கு தம்மையடைந்த மாணாக்கர்களுக்கு உபநிஷத சாஸ்திரங்களைப் போதித்துக் கொண்டிருக்கும்போ து, பிரஹ்ம சூத்திரத்திற்குச் சைவ சித்தாந்த பக்ஷமாய்ப் பாஷியமியற்றியவராகிய நீலகண்டாசாரியர், தமது அரதத்தா சாரியர் முதலிய மாணாக்கர் கூட்டத்தோடு சங்கர பகவத்பாதா சாரியரிடம் வந்து, பெரிய சாஸ்திர வாதஞ்செய்து தோல்வி யடைந்து, அத்துவிதக் கருத்தை உடன்பட்டவராய்ச் சங்கர பகவத்பாதாசாரியர் திருவடியில் அடைக்கலம் புகுந்து மாணா க்கரானார்.

பிறகு சங்கர பகவத் பாதாசாரியர், அங்கிருந்து கூர்ச்சர நாட்டையடைந்து, துவாரகையைச் சேர்ந்து, அங்கு வேத வாதியர்களாக விருக்கும் வைஷ்ணவ ரனைவருக்கும் சிவ விஷ்

ணுவின் அபேதத்தைப் போதித்து வென்று, அவ்விடத்தில் ஒரு மடத்தை ஸ்தாபித்து, அப்பாற் பாகலீக தேசத்தை யடைந்து நாஸ்திக மதங்க ளெல்லாவற்றையும் வென்று, பின்னர் அவந்தி யென்னும் உஜ்ஜைனி ஸ்தலத்தை யடைந்து அங்கு பட்டபாஸ்கராசாரியரைச் சாஸ்திரவாதத்தில் வெற்றி கொண்டு, அங்குள்ள பிரசித்த பண்டிதர்களான பாணர், மயூரர், தண்டி முதலானவர்களையும் வென்று, தமது வேதாந்த பாஷியத்தை யாவருக்கும் போதித்து மாணாக்கர்க ளாக்கிக் கொண்டு, அதன்பின், வரிசையாக அங்கங்கு விளங்கிக்கொண்டிருந்த அநேக கெட்ட மதங்களையும் வென்று, ஜகந்நாதத்தில் ஓர் மடம் ஸ்தாபித்து, கௌடம் முதலிய தேசங்களிலுள்ள அநேக மதங்களைச் சிர்த்திருத்தஞ் செய்து, உலகத்தில் மதச் சண்டை முற்றும் நீங்கி வேதாந்த பாஷியம் எங்கும் விளங்குமாறு செய்தருளினர்.

## சங்கரர் அபிநவ குப்தரை வெல்லல்

பின்னர்ச் சங்கர பகவத்பாதாசாரியர், அஸாம்தேசத்தில் காமரூபம் என்னும் நகரத்தை யடைந்து, பிரஹ்ம சூத்திரத்திற்குச் சக்தி பரமாகப் பாஷியஞ் செய்தவராகிய அபிநவ குப்தரைச் சாஸ்திர வாதஞ்செய்து வெற்றி கொண்டனர். அந்த அபிநவ குப்தர் தோல்வி யடைந்ததால், சங்கரரிடம் மாணாக்கர்போல் நடித்து, சங்கரர்மேல் ஏவல் கர்மஞ்செய்து விட்டார். அதனாற் சங்கரருக்கு உதிரம் வெளிப்படும்படியான மூல நோயுண்டாயிற்று. மறுநாள் அவருடைய ஆடையைத் துவைக்கும்படி கொண்டு சென்ற தோடகாசாரியர் அதனை யறிந்து வந்து, "பகவானே! தேவரீர் தேகத்தி லுண்டாகிய இந்த நோய்க்கு விரைவிற் பரிகாரஞ் செய்யவேண்டும்" என்று கூறினார். பிறகு மாணாக்கர்க ளனைவரும் இவ்வாறு பல விதமாய் வேண்டிக்கொள்ள, அதற்கவர், பிராரத்துவ கருமத்தால் வந்த நோய் அனுபவித்துத் தொலைக்கத்தக்கது என்று பலவித சமாதானங் கூறியும் மனங் கலங்கிய மாணாக்கர்கள், "தங்களுக்குத் தேகாபிமானம் இல்லாவிடினும் நாங்கள் செய்ய வேண்டிய சிகிச்சையைச் செய்துகொள்வோம்" என்று விண்ணப்பஞ்செய்ய, அவர் மௌனமாயிருந்தனர். அதுவே கட்

டனையானதெனக் கொண்டு, அநேக இராஜ வைத்தியர்களாற் பரிகாரஞ் செய்கையில், ஒரு குணமுந் தோன்றாமல் மூலநோய் அதிகரித்துக்கொண்டே வந்தது. சங்கரர் காமனை எரித்த பரமேசுவரரையே நினைத்தனர். அப்போது அக்கடவுளின் ஆஞ்ஞையால் அசுவினிதேவர்கள் இருவர் அந்தணர் வடிவமாகவந்து, சங்கரரைநோக்கி "இந்நோய் பிறருடைய மந்திர ஏவலால் வந்தது" என்று கூறி மறைந்து போனார்கள். அதன்பின், பத்மபாதர், பகைவரிடத்தும் கருணையுடைய சங்கரர் தடுத்தும், அதைக் கேளாமற் கோபித்துத் தமது ஆசிரியரின் நோய் நீங்கும்பொருட்டு மந்திரத்தைச் செபித்தனர். அங்ஙனஞ் செபிக்கவே, சங்கர பகவத்பாதரின் தேகத்திலிருந்து அந்த ஏவல் தேவதை திரும்பிச்சென்று, அபிநவ குப்தரின் தேகத்தில் அந்த மூலவியாதியை யுண்டாக்கி, அந்நோயாலேயே அவனைக் கொன்றுவிட்டது. பெரியோர்களாகிய ஞானிகளுக்கு அறிந்து செய்த பிழை எவர்களுக்குந் தான் இன்பத்தைக் கொடுக்கும்?

## சங்கரர் பஞ்சலிங்கங்களை ஸ்தாபித்தல்

மற்றொருநாள், சங்கரர் கைலாசத்திற்சென்று சிவபெருமானிடத்தினின்று ஸ்ரீ சந்திரமௌளீசுவர பஞ்ச லிங்கங்களைப் பெற்றுக்கொண்டுவந்து, முக்தி லிங்கத்தைப் பதரிகாசிரமத்திலும், வரலிங்கத்தை நேபாளத்திலுள்ள நீலகண்ட க்ஷேத்திரத்திலும், மோக்ஷலிங்கத்தைச் சிதம்பரத்திலும், போக லிங்கத்தைச் சிருங்ககிரியிலும், யோகலிங்கத்தைக் காஞ்சீபுரத்திலும் ஸ்தாபித்தருளினர். பின்னர், கிம்புருஷ கண்டத்திற் காத்திருந்த பிரம்ம ராக்ஷஸனுக்குப் பிரம்மஹத்தியை யொழித்தருளி, சுவாலாமுகி முதலிய பல ஸ்தலங்களிற் சென்று ஞானவழியைப் போதித்து வந்து, கங்கைக்கரையை யடைந்தார். வேறொருநாள், பூகோள ககோள வுண்மைகளைக் கேட்ட பத்மபாதருக்கு அருள்செய்து, யோகப்பழக்கத்தால் அவரையும் அழைத்துக்கொண்டு ஆகாச வழிச்சென்று மேருகிரியும், துருவனிலை, கிரகமண்டல முதலிய கதிநிலைகளையும், பூகோளம் முதலிய சகல விஷயங்களையும் உணர்த்தி மீண்டும் வந்து கங்கைக்கரையைச் சேர்ந்தனர்.

## சங்கரர் கௌடபாதாசாரியரைத் தரிசித்தல்

பின்னொருநாள், சங்கரர் கங்கைக்கரையில் பிரம்மத் தியானஞ் செய்துகொண் டிருக்கும்போது, சுகாசாரியரின் மாணாக்கராகிய கௌடபாதாசாரியர் அங்குவந்து தரிசனங் கொடுத்தருள, சங்கரர், தமது ஆசிரியராகிய கோவிந்த பகவத் பாதாசாரியருக்கு இவர் குருவாகலின், தமக்குப் பரமாசிரியராகிய அவருக்கு விதிப்படி வணங்கித் துதித்து நிற்க, அவர், "சங்கர ! உன் சிறந்த குணங்களைக் கோவிந்த பகவத் பாதாசாரியரால் கேள்வியுற்று, சாந்த மனத்தனாகிய உன்னைப் பார்க்கும் பொருட்டே இப்போது வந்தேன் ; நீ இயற்றிய சாஸ்திரங்களைக் கூறுவாயாக" என, சங்கரர் அவற்றையெல்லாங் காண்பித்துக்கூறி, கௌட பாதாசாரிய ரியற்றிய மாண்டூக்கிய உபநிஷத காரிகைக்குத் தாம் செய்த பாஷியத்தைப் படித்துக் காட்டியபின், அவர் அவற்றை யெல்லாங் கேட்டுத் தம்முடைய கருத்தின்படி உட்பொருளை வெளிப்படுத்திய அச்சங்கராசாரியரது ஆற்றலுக்கு மிகக் களித்து அருள்புரிந்து மறைந்தனர்.

## சங்கரர் ஸர்வஜ்ஞ பீடமேறுதல்

பின்னொருநாள், சங்கர பகவத்பாதாசாரியர், கங்கைக் கரையில், தமது மாணாக்கருடன் இருக்கும்போது, கீழ்வருமாறு உலக வதந்தியைக் கேள்விப்பட்டனர். "காஷ்மீர தேசத்தில் ஸ்ரீநகரம் என்னும் ஸ்தலத்தில் ஸர்வஜ்ஞ பீடத்தையுடைய சரஸ்வதி தேவியின் ஆலயமென்னும் ஒரு மண்டபம் உளது ; அதன் கிழக்குப் பக்கத்திலுள்ள வாயிலையும், மேற்குப் பக்கத்திலுள்ள வாயிலையும், வடக்குப்பக்கத்திலுள்ள வாயிலையும் அந்தந்தத் திக்கிலிருந்துவந்த முற்றுணர்வுடையோர்கள் திறந்து விட்டனர் ; தெற்குப் பக்கத்திலுள்ள வாயிலை, தெற்குத் திசையிலிருந்து முற்றுணர்வுடையோரெவரும் வந்து இன்னுந் திறக்கவில்லை ; வந்தவர்களெல்லாம் அங்குக் காவலிருக்க வித்தைத் தெய்வங்கள், பண்டிதர் வடிவாக அந்தந்த வித்தைகளில் கேட்ட கேள்விகளுக்கு விடைகூறமுடியாமல் திரும்பிப் போய்விட்டனர்" என்னும் இத்தகைய மொழிகளைக் கேட்டவுடன் தெற்குத் திசையில்

அவதரித்த முற்றுணர்வுடையோரான நமது பகவத்பாதா சாரியர், அந்தத் தெற்குவாயிலைத் திறப்பதற்காகக் காஷ்மீர தேசத்திலுள்ள ஸ்ரீ நகரஞ் சென்று சாரதாதேவியின் ஆலய மடைந்தனர். அங்கு வாயிலைத் திறக்கும்படி ஒவ்வொரு படியாக ஏறத்தொடங்க ஒவ்வொரு தெய்வமும் ஒவ்வொரு பண்டிதர் வடிவமாக ஒவ்வோர் படிமீதும் நின்று தடுத்து, ஒவ்வொரு வித்தையில் அருமையான கேள்விகளையும், ஒவ்வொரு மதத்தின் கொள்கைகளையுங் கேட்டுவர, சங்கரபகவத்பாதாசாரியர், அக்கேள்விகளுக்கெல்லாம் உண்மையான விடைகளை அவரவர்களுக்குத் திருப்தியாகக் கூறிக்கொண்டு, சர்வவித்தையிலும் முற்றுணர்வுடைமையைக் காண்பித்து, எல்லாப் படிகளையும் ஏறி பத்மபாதர் கையைப் பிடித்துக் கொண்டு வாயிலின் சமீபஞ் சென்றனர். அப்போது உள்ளிருந்த சாரதாதேவி அசரீரி வாக்காற் கேட்ட கேள்விகளுக்குத் தகுந்த உண்மையான மறுமொழி கூறியபின் தானே திறந்து அந்த வாயிலிற் புகுந்து, ஸர்வஜ்ஞ பீடத்தின்மேலேறி யமர்ந்து சந்தோஷமடைந்தனர். அப்போது, சாரதாதேவியாலும் மற்றைய பண்டிதர்களாலும் இனிது பூசிக்கப்பெற்று, பூமண்டலாசாரியத் தலைவரென்னும் விருதுடையவராய், சர்வ தேவர்களாலும் புகழப்பட்டனர். அப்போது, அந்தச் சங்கர பகவத்பாதாசாரியரின்மேல் தேவர்கள் கற்பகத் தருவின் மலர்களை மழையாகப் பொழிந்தனர்; தேவதுந்துபி முதலிய மங்கள வாத்தியங்கள் முழங்கின.

## சங்கரர் இமயமலையிலுள்ள கேதாரத்தை யடைதல்

அதன்பிறகு, சங்கர பகவத்பாதாசாரியர் மாணாக்கர்களோடு அங்கிருந்து புறப்பட்டு இமயமலையிலுள்ள பதரிகாச்சிரமஞ்சென்று, தம்மா லியற்றப்பட்ட வேதாந்த பாஷியங்களை யாவருக்கும் போதித்துக்கொண் டிருந்தனர். அதன் பின்னர், சிருங்ககிரி மடத்திற்குச் சுரேசுவராசாரியரையும், துவாரகை மடத்திற்கு பத்ம பாதாசாரியரையும், ஜகன்னாத மடத்திற்கு அஸ்தாமலகாசாரியரையும், பதரிகாச்சிரம மடத்திற்குத் தோடகாசாரியரையும் தலைவர்களாக நியமித்து, அத்துவித உண்மையை யாவருக்கும் போதித்து வருநாளு

அவர்களுக்கு ஏற்பாடு செய்துவிட்டு, பின், அந்த இமய மலைச்சாரலிலுள்ள கேதார ஸ்தலத்தை யடைந்தனர். அப்போது, தமது மாணுக்கர்களும் மற்றையர்களும் குளிரால் மிகவும் வருத்தப்பட்டிருக்கையில் நமது சங்கர பகவத்பாதாசாரிய சுவாமிகள் பரம தயாளுவானபடியால் நான்கு பக்கங்களிலும் பனிக்கட்டிகள் ஏராளமாய்க் கிடக்கும் அந்த இடத்திலேயே மிகவும் உஷ்ணமான வெந்நீர் ஆற்றை உண்டாக்கியருளினார்; அது யாவருக்கும் குளிரை நீக்கிச் சுகத்தைச் செய்தது. அந்த வெந்நீர் நதி இப்போதும் அங்கு ஓடிக்கொண்டிருக்கின்றது. அக்காலத்தில், சங்கர பகவத் பாதாசாரியர், தாம் அவதரித்த காரியங்களெல்லாம் நிறைவேறிவிட்டதென்று திருப்தியடைந்தனர். அப்போது முப்பத்திரண்டு வயதும் நிரம்பிவிட்டது.

## சங்கரர் கைலேக்கு எழுந்தருளல்

இவ்வண்ணம், தெய்விகச் செயல்களைச் செய்த பரமேசுவர அவதாரராகிய சங்கர பகவத் பாதாசாரியரைக் கைலாயத்திற்கு அழைத்துச் செல்ல பிரம்மா, விஷ்ணு, இந்திரன் வாய்வு, அக்கினி முதலான சிறந்த தேவர்களும், இருஷிகளும், சித்தர்களும் வந்து தோன்றிச் சங்கர பகவத்பாதாசாரியரைத் துதித்துப் புகழ்ந்து கைலாயத்திற்கு எழுந்தருள வேண்டுமென்று கேட்டுக்கொண்டனர். உடனே, சங்கர பகவத் பாதாசாரியர், தமது மாணுக்கர்களனைவருக்கும் விடைகொடுத்தருளி, பின்னர்த் தமது கைலாயத்தை யடைய எண்ணியவுடனே, உருத்திர கணங்களால் அலங்கரிக்கப்பட்ட அதிக வெண்மையான விருஷபம் எதிரில் வந்து நின்றது. இந்திரன், உபேந்திரன் முதலான சிறந்த தேவர்களால் துதிக்கப்பட்டவராயும், திவ்ய புஷ்பங்களால் அர்ச்சிக்கப்பட்டவராயும், பிரம்மாவினால் தமது திருக் கைகளைத் தாங்கப்பட்டவராயுமிருந்த சங்கர பகவத்பாதாசாரியர் அரிய விருஷப வாகனத்தின்மீது

ஆரோகணித்துக்கொண்டு, தமக்குரித்தான சடை, சந்திரன் முதலிய அடையாளங்களை வெளியாக்கி, மஹரிஷிகள் முதலானவர்களால் நமஸ்கரிக்கப் பெற்றுத் தமது திருக் கைலாயத்திற்கு எழுந்தருளினார்.

வாழ்த்து.

சங்கர ராய சம்பு தாளிணை யென்றும் வாழி
சங்கர வாசான் செய்ய தாண்மலர் தாமும் வாழி
சங்கரன் சரித மெங்குந் தழைத்திடச் செய்வார் வாழி
சங்கரற் போற்று வார்கள் சாசுவத மாக வாழி.

வாழ்க சங்கரன் மலரடி யென்றுமே
வாழ்க நங்குரு வழிவழி யடியவர்
வாழ்க விந்நூல் வையத்து ளோங்கியே
வாழ்க வோதுவார் வான்பத மெய்தியே.

---

ஸ்ரீ சங்கரப் பிரபாவம்

என்னும்

ஸ்ரீ சங்கர பகவத் பாதாசாரியர் சரித்திரம் முடிந்தது.

---

ஸ்ரீ கரபாத்திர சிவப்பிரகாச ஞானதேசிகேந்திர
சுவாமிகள் திருவடி வாழ்க.

சர்வஞ் சின்மயம்.

ஓம் தத் ஸத். ஸ்ரீபிரஹ்மணே நமஃ

ஓம் சாந்திஃ சாந்திஃ சாந்திஃ

---

உ

ஓம் தத் ஸத்

ஸ்ரீசங்கர பகவத்பாதாசாரிய சுவாமிகள் இயற்றிய

# விவேக ஷட்கம்.

அனித்திய பூதத் தேகநா னன்று
விந்தியத் தரங்கநா னன்று
நனித்தவாங் காரப் பிராணவர்க் கங்க
ளன்றுநற் புந்தியு மன்று
தொனித்திடுந் தார மனைசெல்வங் களுக்குத்
தாரமாஞ் சாட்சிநா னென்றுந்
தனித்துநித் தியமாய்ப் பிரத்யகான் மாவாந்
தற்பதப் பொருளதாஞ் சிவோகம். 1

உற்பவன் விருத்த னன்றுநா னோர்கா
லத்திலு நசிப்பவ னன்று
அற்பமாந் தேக காரிய மான
வவையெலா மகங்கரத் தல்லாற்
றற்பத வடிவாஞ் சின்மய மான
வெனக்கிலை சகளநிட் களமா
யெப்புறத் தேனு மெல்லையற் றிருக்கு
மின்பசிற் சொரூபமாஞ் சிவோகம். 2

சத்திய ஞான னந்தமாம் பிரமத்
தாதித்திடு மாயையிற் சனித்த
மெத்துமிவ் வுலகுஞ் சேதனத் திடையே
நசிக்குமத் தேதென விளம்பிற்
றத்துசொப் பனமுஞ் சுழுத்தியி லசத்தாந்
தன்மைபோற் சத்திலா திருக்குஞ்
சத்தபூ ரணமாய் நித்திய மாகித்
துலங்கிய சொரூபமாஞ் சிவோகம். 3

பழுதைதன் னிடத்திற் பாம்புதோன் றுதல்போற்
    பரப்பிர மத்திடை யதனிற்
கழிதரு மஞ்ஞா னத்தினாற் சீவ
    னுதித்திடக் கண்டவ னொருவன்
பழுதையென் றதனாற் சர்ப்பமோ கழும்போய்ப்
    பழுதையாய்க் கண்டது போல
வழுவிறோ சிகனார் சீவனீ யன்றென்
    றறைந்திட வாகினேன் சிவோகம். 4

ஏமக்குமன் னியமா முலகமொன் றில்லை
    யெவ்வுல கங்களெம் மிடத்திற்
சமித்துறு பவமா மாதலான் மாயை
    வடிவம் தேகந்தனிற் சாற்ற
வமைத்தகன் றுமிழ் விம்பமா நிழல்போ
    லடங்கியெம் மிடத்தினில் விளங்குந்
தமத்துவ மில்லாச் சச்சிதா னந்த
    தற்பத விமலமாஞ் சிவோகம். 5

சாக்கிர மதனி லிந்திரி யங்க
    டமக்குமேற் சாட்சியாஞ் சிவோகம்
தேக்குசொப் பனத்தி லுலகரு படமாய்ச்
    செய்மனச் சாட்சியாஞ் சிவோகம்
தாக்கிய சித்த நாசமாஞ் சுழுத்தி
    யவத்தையிற் சாட்சியாஞ் சிவோகம்
நீக்கமி றுரியா னந்தமாஞ் சர்வ
    நிர்மல சாட்சியாஞ் சிவோகம். 6

விவேக ஷட்கம் முடிந்தது.

ஓம் தத் ஸத்

## விநாயகர் பூஜா ஸ்தோத்திரம்.

ஶுக்லாம் பரதரம் விஷ்ணும் ஶஶிவர்ணம் சதுர்ப்புஜம்
ப்ரஸந்ந வதநம் த்யாயேத் ஸர்வவிக்நோப ஶாந்தயே.

### ஸ்ரீ விநாயகர் சோடச நாமங்கள்

ஓம் ஸுமுகாய நம:
,, ஏகதந்தாய நம:
,, கபிலாய நம:
,, கஜகர்ணிகாய நம:
,, லம்போதராய நம:
,, விகடாய நம:
,, விக்நராஜாய நம:
,, கணாதிபதயே நம:
ஓம் தூமகேதவே நம:
,, கணாத்யக்ஷாய நம: 10
,, பாலசந்த்ராய நம:
,, கஜாநநாய நம:
,, வக்ரதுண்டாய நம:
,, ஶூர்ப்பகர்ணாய நம:
,, ஹேரம்பாய நம:
,, ஸ்கந்தாக்ரஜாய நம: 16

ஓம் ஸ்ரீமத் அகண்ட பரிபூரண ஸச்சிதாநந்த அத்வைத
ஜோதிஸ்வரூப ஸ்ரீ விக்நேஶ்வராய நமோ நம:
ஓம் நாநாவித பரிமள பத்ர புஷ்பாணி ஸமர்ப்பயாமி.

---

## ஸ்ரீ சங்கர பகவத் பாதாசாரிய சுவாமிகள்

### அஷ்டோத்தர ஶத நாமாவளி

ஓம் ஶங்கராசார்யவர்யாய நம:
,, ப்ரஹ்மாநந்த ப்ரதாயகாய நம:
,, அஜ்ஞாந திமிராதித்யாய நம:
,, ஸுஜ்ஞாநாம்புதி சந்த்ரமஸே நம:
,, வர்ணாஶ்ரம ப்ரதிஷ்டாத்ரே நம: 5
,, முக்திப்ரதாயகாய நம:
,, ஶிஷ்யோபதேஶ நிரதாய நம:
,, பக்தாபீஷ்ட ப்ரதாயகாய நம:
ஓம் ஸூக்ஷ்ம தத்வ ரஹஸ்யஜ்ஞாய நம:
,, கார்யாகார்யப்ரபோதகாய நம: 10
,, ஜ்ஞாந முத்ராஞ்சித கராய நம:
,, ஶிஷ்ய ஹ்ருத்தாப ஹாரகாய நம:
,, பரிவ்ராஜாஶ்ரமோத்தர்த்ரே நம:
,, ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரதியே நம:
,, அத்வைத ஸ்தாபநாசார்யாய நம: 15

ஓம் அமாநுஷ சரித்ராட்யாய நம: 65
„ க்ஷேமதாயிநே நம:
„ க்ஷமாகராய நம:
„ பவ்யாய நம:
„ பத்ரப்ரதாய நம:
„ பூரிமஹிம்நே நம: 70
„ விச்வ ரஞ்ஜகாய நம:
„ ஸ்வப்ரகாசாய நம:
„ ஸதாதாராய நம:
„ விச்வபந்தவே நம:
„ சுபோதயாய நம: 75
„ விசாலகீர்த்தயே நம:
„ வாகீசாய நம:
„ ஸர்வலோக ஹிதோத்ஸுகாய நம:
„ கைலாஸ யாத்ரா ஸம்ப்ராப்த சந்த்ர மௌளி ப்ரபூஜகாய நம:
„ காஞ்ச்யாம் ஸ்ரீ சக்ர ராஜாக்ய யந்த்ர ஸ்தாபந தீக்ஷிதாய நம: 80
„ ஸ்ரீ சக்ராத்மக தாடங்க தோஷிதாம்பா மநோரதாய நம:
„ ஸ்ரீ ப்ரஹ்ம ஸூத்ரோபநிஷத் பாஷ்யாதி க்ரந்த கல்பகாய நம:
„ சதுர்த்திக் சதுராம்நாய ப்ரதிஷ்டாத்ரே நம:
„ மஹாமதயே நம:
„ த்விஸப்ததி மதோச்சேத்ரே நம: 85
„ ஸர்வ திக்விஜய ப்ரபவே நம:
ஓம் காஷாய வஸநோபேதாய நம:
„ பஸ்மோத்தூளித விக்ரஹாய நம:
„ ஞாநாத்மகைக தண்டாட்யாய நம:
„ கமண்டலு லஸத்கராய நம:
„ குரு பூமண்டலாசார்யாய நம:
„ பகவத்பாத ஸம்ஜ்ஞகாய நம:
„ வ்யாஸ ஸந்தர்சன ப்ரீதாய நம:
„ ரிஷ்ய ச்ருங்கபுரேச்வராய நம:
„ ஸௌந்தர்ய லஹரீ முக்ய பஹுஸ்தோத்ர விதாயகாய நம: 95
„ சதுஷ் ஷஷ்டிகலா பிஜ்ஞாய நம:
„ ப்ரஹ்ம ராக்ஷஸ போஷகாய நம:
„ ஸ்ரீமந் மண்டன மிச்ராக்ய ஸ்வயம்புஜய ஸந்நுதாய நம:
„ தோடகாசார்ய ஸம்பூஜ்யாய நம:
„ பத்ம பாதார்ச்சிதாங்க்ரிகாய நம: 100
„ ஹஸ்தாமலக யோகீந்த்ர ப்ரஹ்மஜ்ஞாந ப்ரதாயகாய நம:
„ ஸுரேச்வராசார்ய முக்ய ஸச்சிஷ்யாய ஸம்ப்ரமதாய காய நம:

ஓம் ந்ருஸிம்ஹபக்தாய நமஃ
„ ஸத்ரத்ந கர்ப்ப ஹேரம்ப பூஜகாய நமஃ
„ வ்யாக்யாந ஸிம்ஹாஸநாதீசாய நமஃ 105

ஓம் ஜகத்பூஜ்யாய நமஃ
„ ஜகத்குரவே நமஃ
„ ஸ்ரீமத் சங்கராசார்ய ஸர்வலோக குரோஃ பராய நமஃ 108

ஓம் ஸ்ரீமத் அகண்ட பரிபூரண சச்சிதாநந்த அத்வைத ஜோதி ஸ்வரூப ஸ்ரீ சங்கர பகவத் பாதாசார்ய ஸ்வாமினே நமோ நமஃ.

ஓம் நாநாவித பரிமள பத்ர புஷ்பாணி ஸமர்ப்பயாமி.

---

ஸ்ரீ சங்கர பகவத் பாதாசாரிய சுவாமிகள்

அஷ்டோத்தர சத நாமாவளி முடிந்தது.

ஓம் தத் ஸத்

ஸ்ரீ பிரஹ்மார்ப்பண மஸ்து.

ஓம் சாந்திஃ சாந்திஃ சாந்திஃ



# ఓమ్ తత్ సత్.

# వినాయక పూజా స్తోత్రం.

శ్లో॥ శుక్లామ్బరధరం విష్ణుం శశివర్ణం చతుర్భుజమ్।
ప్రసన్న వదనం ధ్యాయే త్సర్వవిఘ్నోప శాన్తయే॥
ఓమ్ మహాగణాధిపతయేనమః

వినాయక షోడశ నామములు.

| | | | |
|---|---|---|---|
| ఓమ్ సుముఖాయ నమః | 1 | ఓమ్ ధూమకేతవే నమః | 9 |
| ,, ఏకదన్తాయ నమః | 2 | ,, గణాధ్యక్షాయ నమః | 10 |
| ,, కపిలాయ నమః | 3 | ,, ఫాలచన్ద్రాయ నమః | 11 |
| ,, గజకర్ణికాయ నమః | 4 | ,, గజాననాయ నమః | 12 |
| ,, లంబోదరాయ నమః | 5 | ,, వక్రతుణ్డాయ నమః | 13 |
| ,, వికటాయ నమః | 6 | ,, శూర్పకర్ణాయనమః | 14 |
| ,, విఘ్నరాజాయ నమః | 7 | ,, హేరమ్బాయ నమః | 15 |
| ,, గణాధిపతయే నమః | 8 | ,, స్కన్దాగ్రజాయ నమః | 16 |

ఓమ్ శ్రీమదఖండ పరిపూర్ణ సచ్చిదానందాద్వైత జ్యోతి స్వరూప శ్రీవిఘ్నేశ్వరాయ నమోనమః. ఓమ్ నానావిధ పరిమళపత్ర పుష్పాణి సమర్పయామి.

ఓమ్ తత్ సత్.

శ్రీమత్ శంకర భగవత్పాదాచార్యులవారి అష్టోత్తర శతనామావళి.

ఓమ్ శంకరాచార్య వర్యాయ నమః
,, బ్రహ్మానంద ప్రదాయకాయ నమః
,, అజ్ఞానతిమిరాదిత్యాయ నమః
,, సుజ్ఞానాంబుధి చంద్రమసేనమః
,, వర్ణాశ్రమప్రతిష్ఠాత్రే నమః
,, ముక్తి ప్రదాయకాయ నమః
,, శిష్యోపదేశ నిరతాయ నమః
,, భక్తాభీష్టప్రదాయకాయ నమః
,, సూక్ష్మతత్త్వరహస్యజ్ఞాయనమః
,, కార్యాకార్య ప్రబోధకాయ నమః
,, జ్ఞానముద్రాంచితకరాయ నమః
ఓమ్ శిష్యహృత్తాపహారకాయ నమః
,, పరివ్రాజకాశ్రమోద్ధర్త్రే నమః
,, సర్వతంత్రస్వతంత్రధియే నమః
,, అద్వైతస్థాపనాచార్యాయ నమః
,, సాక్షాచ్ఛంకర రూపభృతే నమః
,, షణ్మతస్థాపనాచార్యాయ నమః
,, త్రయీమార్గప్రకాశకాయ నమః
,, వేదవేదాంత తత్త్వజ్ఞాయ నమః
,, దుర్వాది మతఖండనాయ నమః
,, వైరాగ్య నిరతాయ నమః

ఓమ్ శాంతాయ నమః
,, సంసారార్ణవతారకాయ నమః
,, ప్రసన్నవదనాంభోజాయ నమః
,, పరమార్థప్రకాశకాయ నమః
,, పురాణస్మృతిసారజ్ఞాయ నమః
,, నిత్యతృప్తాయ నమః
,, మహతే నమః
,, మునయే నమః
,, నిత్యానందాయ నమః
,, నిరాంతంకాయ నమః
,, నిస్సంగాయ నమః
,, నిర్మలాత్మకాయ నమః
,, నిర్మమాయ నమః
,, నిరహంకారాయ నమః
,, విశ్వవంద్యపదాంబుజాయ నమః
,, సత్వప్రధానాయ నమః
,, సద్భావాయ నమః
,, సంఖ్యాతీతగుణోజ్జ్వలాయ నమః
,, అనఘాయ నమః
,, సారహృదయాయ నమః
,, సుధియే నమః
,, సారస్వత ప్రదాయ నమః
,, సత్యాత్మనే నమః
,, పుణ్య శీలాయ నమః
,, సాంఖ్యయోగవిచక్షణాయ నమః
,, తపోరాశయే నమః
,, మహాతేజసే నమః
,, గుణత్రయవిభాగవిదే నమః
,, కలిఘ్నాయ నమః

ఓమ్ కాలకర్మజ్ఞాయ నమః
,, తమోగుణ నివారకాయ నమః
,, భగవతే నమః
,, భారతీ జేత్రే నమః
,, శారదాహ్వాన పండితాయ నమః
,, ధర్మాధర్మ విభాగజ్ఞాయ నమః
,, లక్ష్యాలక్ష్య భేద ప్రదర్శకాయ నమః
,, నాదబిందు కళాభిజ్ఞాయ నమః
,, యోగిహృత్పద్మభాస్కరాయ నమః
,, అతీంద్రియ జ్ఞాననిధయే నమః
,, నిత్యానిత్య వివేకవతే నమః
,, చిదానందాయ నమః
,, చిన్మయాత్మనే నమః
,, పరకాయప్రవేశకృదే నమః
,, అమానుషచరిత్రాఢ్యాయ నమః
,, క్షేమదాయనే నమః
,, క్షమాకరాయ నమః
,, భవ్యాయ నమః
,, భద్రప్రదాయ నమః
,, భూరిమహిమ్నే నమః
,, విశ్వరంజకాయ నమః
,, స్వప్రకాశాయ నమః
,, సదాధారాయ నమః
,, విశ్వబంధవే నమః
,, శుభోదయాయ నమః
,, విశాలకీర్తయే నమః
,, వాగీశాయ నమః
,, సర్వలోకహితోత్సుకాయ నమః

